# மின்னூல் வெளியீடு

மின்னூல் வெளியீட்டாளர்: http://freetamilebooks.com

அட்டைப்படம்: லெனின் குருசாமி - guruleninn@gmail.com

மின்னூலாக்கம்: ஐஸ்வர்யா லெனின் - aishushanmugam09@gmail.com

மின்னூலாக்க செயற்திட்டம்: கணியம் அறக்கட்டளை - kaniyam.com/foundation

# Ebook Publication

Ebook Publisher: http://freetamilebooks.com

Cover Image: Lenin Gurusamy - guruleninn@gmail.com

Ebook Creation: Iswarya Lenin - aishushanmugam09@gmail.com

Ebook Project: Kaniyam Foundation - kaniyam.com/foundation

பதிவிறக்கம் செய்ய - http://freetamilebooks.com/ebooks/babasaheb$_d$r$_a$mbedkar

This Book was produced using LaTeX + Pandoc

# பொருளடக்கம்

# பாபாசாகேப் டாக்டர் அம்பேத்கர - (என் எளிய வாசிப்பில்)

சிறு வெளியீடு நவம்பர் 2021

டாக்டர் அம்பேத்கர் தன்னளவில் பெரும் ஆளுமை மட்டுமன்று, அவர் ஆளுமைகளின் ஆளுமையாகவும் கொண்டாடப்படுகிறார். அவ்வப்போது அவரை வாசித்து தெளிந்த அனுபவங்களில் கடந்த 20 ஆண்டுகளில் எழுதிப்பார்த்த சில கட்டுரைகளை இங்கு சிறு மின் வெளியீடாக்கியுள்ளேன்.

முன்பு இணையத்தில் போடப்பட்ட 'அம்பேத்கரும் கம்யூனிசமும்' என்ற சிறு வெளியீட்டையும், 'வட்டமேஜை மாநாட்டில் அம்பேத்கர்' என்ற சிறு வெளியீட்டையும் இந்த சிறு வெளியீட்டுடன் சேர்த்து வாசிக்க வேண்டுகிறேன்.

அம்பேத்கர் குறித்து ஏராள நூல்கள் வந்துள்ளன. நான் ஏதும் புதிதாக இங்கு எதையும் கொண்டுவந்து சேர்த்துவிடவில்லை என்பதை புரிந்தே இங்கு காணப்படும் கட்டுரைகளை வாசகர்கள் பார்வைக்கு முன்வைக்கிறேன்.

அம்பேத்கரின் ஆளுமைப் பயணம் , பாபாசாகேப் அம்பேத்கர் அன்றாட வாழ்க்கை துளிகள், ஆளுமைகளின் ஆளுமை அம்பேத்கர், அம்பேத்கரின் பகவத்கீதை விமர்சனம், அம்பேத்கரின் முகப்புரை, அம்பேத்கரும் பட்டியல் சாதியினரின் அரசியல் அதிகாரமும், பாபாசாகேப் அம்பேத்கரின் அரசியல் பொருளாதார சிந்தனைகள் எனத் தலைப்பிடப்பட்ட ஏழு கட்டுரைகள் இந்த வெளியீட்டில் இணைக்கப்பட்டுள்ளன.

அம்பேத்கரின் சாதி குறித்த ஆய்வுகள், அம்பேத்கரும் மதமும், அம்பேத்கரும் பிரிட்டிஷ் ஆட்சியும் போன்ற தலைப்புகளில் சில குறிப்புகளை எழுதிப் பார்க்க வேண்டும் என்ற உந்துதல் இருக்கிறது. ஆந்திரா மார்க்சியர் ரங்கநாயகியம்மா எழுதிய புத்தகத்தை முன்வைத்து ஏறத்தாழ

மூன்றுமணிநேர உரை ஒன்றை சென்னை பாட்டாளி படிப்புவட்டத் தோழர்கள் மத்தியில் சில ஆண்டுகளுக்கு முன்னர் ஆற்றியிருந்தேன். அந்த உரையின் குறிப்புகளை தவறவிட்டதால் அதனை இத்துடன் என்னால் இணைக்கமுடியாமல் போனது. அதில் சாதி குறித்த அம்பேத்கர் ஆய்வுகளையும், சிபி அய், சிபி எம், சிபி எம் எல் தலைவர்கள் சாதி குறித்த ஆய்வுகளையும் ஒப்பீடாக முன்வைத்திருந்தேன்.

அடுத்து கிடைக்கும் வாய்ப்பில் மேற்சொன்ன கடமைகளை நிறைவேற்ற காலம் அனுமதிக்கும் என்று கருதிக்கொள்கிறேன். இளம் வாசகர்களுக்கு என் எளிய வாசிப்பு அம்பேத்கர் பற்றிய புரிதலுக்கு துணை நின்றால் அது என் பேறு.

8-11-2021

அன்புடன்,

ஆர்.பட்டாபிராமன்

# 1. அம்பேத்கரின் ஆளுமைப் பயணம்

(கடலூர் NFTE நடத்திய அம்பேத்கரின் 125 வது பிறந்த தினகூட்ட சொற்பொழிவு ஏப்ரல் 15 , 2016- உரையின் சுருக்கப்பட்ட கட்டுரை வடிவம்)

அம்பேத்கர் மகத்தான சமூகப்போராளியாக எப்படி உருவானார், எவற்றை உருவாக்க விரும்பினார் என்பதை இன்றைய நாளின் இளம் தலைமுறையினர் அறியவேண்டும். அவரின் எழுத்துக்களின் தொகுப்பில் பத்தாயிரம் பக்கங்களாவது நமது தொடர்தேடலுக்காக காத்து நிற்கின்றன.

பிரித்தானியர் வருகைக்கு முன்பான இந்திய சமூகம் தொடர்ச்சியான ஒரேநாடாக இருந்ததா- தொடர்பறா சமூகமாக விளங்கியதா என்பதைப் பற்றி முற்கால புராதன இந்தியா குறித்து ரொமிலா தாப்பர் உள்ளிட்டவர் தங்கள்ஆய்வுகளை தந்துள்ளனர். பிரிட்டிஷாருக்கு இந்திய நாடு பெரும் சுரண்டல்காடாக இருந்ததுடன் ஆய்வுக்களனாகவும் ஆச்சரியப்படத்தக்கதாகவும் இருந்தது. வாழ்க்கைமுறையில் உணவு, உடை, மொழி, கலாச்சார வித்தியாசங்களை அவர்கள் கண்டனர். தங்கள் அய்ரோப்பிய கலாச்சாரத்தின் பெருமைதனை உணரத்தக்க சமூகத்தட்டு ஒன்றை அவர்கள் ஏற்படுத்த முனைந்தனர். நமது மொழிகளைக்கூட அவர்களில் சிலர் கற்றனர். நமக்கு வீரமாமுனிவர். ஜி யு போப் போன்றவர்கள் கிடைத்தனர்.

பிரிட்டிஷார் வரவால் இந்தியர்கள் வாழ்க்கையிலும் மாற்றங்கள் வரத்துவங்கின. ஆங்கிலமொழி அறிவால் மேற்கத்திய கருத்துக்களின் செல்வாக்கு படரத்துவங்கியது. பிரஞ்சு புரட்சி, பிரிட்டிஷ் நாடாளுமன்றமுறை, அமெரிக்க விடுதலைப்போர், இத்தாலியின் மாஜினி கரிபால்டி, சோவியத் புரட்சி என பல்வேறு தாக்கங்களுக்கு இந்தியர்கள் தொடர்ந்த பல ஆண்டுகளில்உள்ளானார்கள். மேற்கு எழுத்துக்களால் பாதிக்கப்படாத முன்னணி தலைவர்களே இல்லை எனலாம். ஆங்கிலேயர் உதவியுடன் இந்தியச் சமூகத்திற்கு தேவைப்பட்ட சீர்திருத்தங்களுக்கான முயற்சிகளும் நடந்தேறின. ராஜாராம்மோகன் ராய் போன்றவர் இதில் பங்காற்றினர்.

பிரம்மசமாஜம் ஆரிய சாமாஜங்கள் உருவாயின. தாகூரின் மூத்தோர்கள் இவற்றில் ஆர்வம்காட்டினர். தமிழகத்தில் அயோத்திதாச பண்டிதர், மராட்டியத்தில் பூலேதம்பதிகளின் சிந்தனைகள் தாக்கத்தை உருவாக்கின. சமஸ்தான மன்னர்கள் சிலர் ஆங்கிலம் கற்று சீர்திருத்தங்களுக்கு ஆதரவாகவும் நின்றனர். பரோடாமன்னர் கெய்க்வார்டு அத்தகையவர்களில் ஒருவராக இருந்தார்.

மகாத்மா பூலே சாதிக்கொடுமைகளை சாடிப்போராடினார். பிராம்மண எதிர்ப்பு போராட்டமாகவே அவை அமையமுடியும். ஒடுக்கப்பட்ட மக்களின் கல்வி அறிவுமேம்பாடு, நாகரீகமான இருப்பிட சூழல், அடிமைப்போல் உழைக்கும் நிலையை மாற்றல், எதிர்க்கவேண்டியவைகளுக்கு மௌனம் கலைத்து போராடுதல் என்பதற்கான போராட்டக்களத்தை பூலே அமைத்தார்.

தமிழகத்தில் அயோத்திததாசர் பண்டிதர் ஒரு பைசா தமிழன் என்கிற பத்திரிகைமூலம் விழிப்புணர்வை ஏற்படுத்திவந்தார். அயோத்திதாச பண்டிதர், சிங்காரவேலர், பெரியார் என்கிற பெரும் ஆளுமைகள் தமிழகத்தில் இப்போராட்டங்களை முன்னெடுத்தனர்.

இந்த இந்திய சூழலில்தான் அம்பேத்கர் வளர்ந்துவருகிறார். அவரின் மூதாதையர்கள் இரத்தினகிரி மாவட்டத்தில் மஹர் என்கிற பிரிவைச்சார்ந்தவர்கள். 1890களில் அவர்கள் குடும்பம் பிரிட்டிஷ் இராணுவ ஆளெடுப்பில் வாய்ப்பை பெற்றனர். மஹர் என்பதற்கு பொதுவாக தாய்வீடு என்கிற பொருள்உண்டு. தாய் வீட்டில், பிறந்தவீட்டில் இருக்கிறோம் என்கிற பெருமிதஅடையாளமது. ஆங்கிலம் பேசத்தெரிந்தவர்களாக இருந்த சிலருக்கு சில வாய்ப்புகள் கிடைத்தன.

முதல் உலகப்போர் காலத்தில் மஹர் பட்டாலியன் படைப்பிரிவு பயன்படுத்தப்பட்டது. மஹர் இனத்தாருக்கு பெருகிய செல்வாக்கு சிலருக்கு கண்களை உறுத்தியது. அவர்கள் ‘கிரிமினல் டிரைப்’ என சிலசாட்சியங்களை எடுத்துக்காட்டி இராணுவவேலைக்கு சேர்க்கக்கூடாது எனசட்டம் கொணர சிலர் போராடினர். திலகர்கூட ஆதரவாக பேசினார் என்கிற செய்தி கிடைக்கிறது. இதனால் அரசாங்க வேலை என்கிற வாய்ப்பு ஆயிரக்கணக்கான இளைஞர்களுக்கு தடைப்பட்டது. விவசாய வேலையும்

பெரும் பலனை தரவில்லை.

அம்பேத்கரின் தந்தை ராம்ஜி இந்தப்பிரச்சனையை புகழ்பெற்ற மகாதேவரானடே அவர்களிடம் எடுத்து சென்றார். ரானடே, கோகலே ஆகியோருக்கு ஆங்கிலேயர்களிடம் மரியாதை இருந்தது. காந்திக்கு முன்பான பெருந்தலைவர்களாக திலகருடன் சேர்த்து அறியப்பட்டவர்கள். பின்னாட்களில் அம்பேத்கர் இவர்கள் அனைவருடனும் கருத்து மோதல் செய்தார். காந்தியுடன் ஆனாலும், கம்யூனிஸ்ட்களுடன் ஆனாலும் அவர் தன் நிலைப்பாட்டை வெளிப்படுத்தி போராடுபவராக இருந்தார். ரானடே தலையீட்டால் மஹர்பிரிவினர் மீண்டும் சேர்க்கப்பட்டனர். அம்பேத்கர் வளர்ந்த பின்னர் புகழ்வாய்ந்த எல்பின்ஸ்டன் கல்லூரிக்கு செல்கிறார்.

மஹர் சமூகத்திலிருந்து முதல்முறையாக வெளிநாடு சென்று படிக்கும் வாய்ப்பு அம்பேத்கருக்கு கிடைக்கிறது. கொலம்பியா பல்கலைக்கழகம் ஆய்வுகளின் முன்னோடி கல்விநிறுவனம். அங்கு அம்பேத்கர் தனது மிக முக்கிய ஆய்வறிக்கைகளை வெளியிடுகிறார். வர்த்தகரீதியாக ரூபாயின் மதிப்பு என்பது வருகிறது. இந்தியாவில் சாதிகள் எனும் புகழ்வாய்ந்த செவ்வியல் தாக்கம்நிறைந்த அறிக்கை இந்தியன் ஆண்டிக் எனும் பழமைகளை- வரலாறுகளை பதிவு செய்யும் இதழில் வெளியாகிறது.

இந்தியத் தலைவர்கள் பலரையும் போல அம்பேத்கரும் மேற்கித்தியசிந்தனைகளின் தாக்கத்திற்கு உள்ளாகிறார். அவர் மறைவதற்கு முன்னர் 1952ல்என்னுடைய ஒட்டுமொத்த அறிவிற்கும் நான் யாருக்காவது கடமைப்பட்டிருக்கிறேன் என்றால் அந்த அறிவார்ந்த கடனுக்குரியவர் (Intellectual debt) ஜான் பிரடெரிக் துவெ ( John Frederik Dewey) என தெரிவிக்கிறார். தனது அமெரிக்கப் பயணத்தின்போது அவரை சந்திக்கவும் அவர் விருப்பமாகஇருந்தார். ஆனால் பேராசிரியர் ஜான் துவே ஜூன் 1952ல் மறைந்துவிடுகிறார். பேராசிரியர் செலிகன் என்பவரும் அம்பேத்கரிடம் செல்வாக்கு செலுத்தியவர்.

இரண்டு முக்கிய முழக்கங்களை அம்பேத்கர் மேற்கித்திய சிந்தனைமரபிலிருந்து, புரட்சிகளின் வரலாற்றிலிருந்து எடுத்துக்கொண்டார். சுதந்திரம், சமத்துவம், சகோதரத்துவம் என்கிற பிரஞ்சு புரட்சியின்

புகழ்வாய்ந்த முழக்கம். இந்த வாசகத்தை அம்பேத்கர் தொடர்ந்து முழங்கிவந்தார். இந்திய தன்மையில்இதன் பொருள் என்ன என்பதை ஆழமாக விளக்கியுள்ளார். இரண்டாவது முழக்கம் தமிழகத்தில் அவர் சிலையுள்ள இடங்களில் எல்லாம் காணப்படும் முழக்கமான கற்பி, ஒன்று சேர், போராடு ( Educate, Organise, Agitate) . இம்முழக்கம் Fabian Socialist கள் வெளிப்படுத்திய முழக்கம். மார்க்சியவகைப்பட்ட சோசலிச சொல்லாடல்கள் நமக்கு பழக்கமானவையாக இருக்கும். ஜெயபிரகாஷ் , நரேந்திரதேவ் போன்றவர்கள் 'டெமாக்ரடிக் சோசலிசம்' எனப்பேசினர். இங்கிலாந்தில் வெப், கோல், பெர்னாட் ஷா போன்றவர்கள் புகழ்வாய்ந்த பேபியன் சோசலிஸ்ட்களாக இருந்தனர். அன்னிபெசண்ட் கூட தன் இளமைப்பருவத்தில் இத்தலைவர்களுடன் பணியாற்றி சோசலிச தாகம் கொண்டவராக இருந்தார்.

பொருளாதார அறிஞர்களுக்கு லண்டன் ஸ்கூல் ஆப் எகானமிக்ஸ் பெருமைக்குரிய ஒன்று. இந்த லண்டன் பொருளாதாரப்பள்ளியையும் பேபியன்தலைவர்கள்தான் நிறுவினார்கள். அங்கே அம்பேத்கர் செல்கிறார், கற்கிறார்.

லாகூரில் 1922ல் சற்று முற்போக்கான 'ஜாட் பட் தோடக் மண்டல்' சாதி எதிர்ப்பு நிறுவனமாக உருவானது. ஆர்ய சமாஜ் உடன் அதற்கு மோதல் போக்கு ஏற்பட்டது. 1931ல் மக்கள் தொகை கணக்கெடுப்பின் போது சாதியை சொல்லாதே என்கிற இயக்கத்தை மண்டல் உறுப்பினர்கள் மேற்கொண்டனர். 1936ல்அவர்களது ஆண்டு மாநாட்டிற்கு தலைமை உரையாற்ற அம்பேத்கரை அழைத்திருந்தனர். இது தொடர்பான கடிதப்போக்குவரத்து மண்டல் நிர்வாகிக்கும் அம்பேதக்ருக்கும் நடந்தது. உடன்பாடின்மை காரணமாக அம்பேத்கரால் அங்கு உரையாற்ற முடியாமல் போனது. ஆனால் அப்படைப்பை வெளியிட்டார். அப்படைப்பு இன்று மிகவும் புகழ் வாய்ந்த ஒன்றாக கருதப்படும் சாதியை ஒழிக்க வழி Annihilation of Caste என்பதாகும்.

அம்பேத்கர் ஒருவிஷயத்தில் மிகத்தெளிவாக இருப்பார். பலநாட்கள் கண்விழித்து ஆய்வு செய்து சரி என வந்தடைந்தவற்றை மாற்ற அவர் சம்மதிக்கமாட்டார். ஆய்வில்லாமல் எச்சொல்லையும் அவர்

பயன்படுத்துவதில்லை. பிறருக்கு எரிச்சல் தருகிறது என்பதற்காக எதையும் மாற்றமாட்டார். இப்படிப்பட்ட தீவிர 'கமிட்மெண்ட்' அவரது எழுத்துக்களில் இருக்கும்.

ஆற்றப்படமுடியாமல் போன அவ்வுரை லிங்கனின் கெட்டிஸ்பர்க் உரை, விவேகானந்தரின் சிகோகோ உரை போன்றவைகளுக்குரிய மரியாதையைபெறத்தக்கதோர் உரை என கருதப்படவேண்டும். செவ்வியல்தன்மை கொண்ட நூலாக அதைப் பார்க்கவேண்டும். அருந்ததிராய் அம்பேத்கர்-காந்தியை முன்வைத்து Doctor and the saint என இப்புத்தகம் பற்றி விரிவாக விவாதித்துள்ளார். அதற்கு எதிர்வினையை ராஜ்மோகன் காந்தி, நிஷிகாந்த் கோல்கே போன்றவர்கள் எழுதியுள்ளனர்.

அம்பேத்கர் தன்னளவில் பத்திரிகையாளராகவும் போராடியுள்ளார். 'மூக்நாயக்' என்கிற வாய் அடைக்கப்பட்டோரின் குரல், 'பகிஷ்கரித் பாரத்', மூன்றாவதாக 'ஜனதா' என்கிற பத்திரிகை. ஜனதா எனும் பத்திரிகையை பின்னர் சோசலிஸ்ட்களும் ஆங்கிலத்தில் நடத்தினர். லோகியா, ஜெயபிரகாஷ், பேராசிரியர் மதுதண்டவதே ஆகியோர் ஆசிரியராக இருந்துள்ளனர்.

அரசு சட்டக் கல்லூரியின் பேராசிரியராக அம்பேத்கர் எட்டு ஆண்டுகள் பணியாற்றினார். அதன் முதல்வராகவும் ஆனார். சைமன் கமிஷனில் சாட்சியம் சொல்ல வாய்ப்புபெற்றார். வட்டமேஜை மாநாடுகளில் தனித்த தன் வாதங்களை வைத்தார். பிரிட்டிஷ் அரசாங்கம் தலித்களுக்கு தனித்த வாக்குரிமை என்பதையும் தரவேண்டியிருந்தது. பிரிட்டிஷ் பிரதமரின் இந்த 'அவார்டு' காந்தியை பட்டினிப்போராட்டம் நோக்கித் தள்ளியது. அம்பேத்கருக்கும் சில இந்து தலைவர்களுக்கும் இடையே உடன்பாடு ஏற்பட்டு காந்தியின் உயிர் காக்கப்பட்டது. தலித்களுக்கு 'தனித்தஇடங்கள் பொது வாக்குரிமை' என்கிற பூனா உடன்பாடாக அது வரலாற்றில் இடம் பெற்றுள்ளது.

'பிரிட்டிஷ் லேபர் பார்ட்டி' போன்ற ஒன்றை இந்தியாவிலும்சோதிக்க அம்பேத்கர் விரும்பினார். ILP கட்சி உருவாக்கி சோதித்தார். பின்னர் தனித்த தலித்களுக்குரிய பிரத்யேகமான செட்யூல்ட் ஃபெடரேஷன் SCF

உருவாக்கினார். கிருபளானி , ஆச்சார்யா நரேந்திரதேவ், லோகியா போன்றவர்கள்கூட அம்பேத்கருடன் உடன்பட்டு செயல்பட விரும்பினார்கள். அம்பேத்கர் காந்தியுடன், சோசலிஸ்களுடன், கம்யூனிஸ்ட்களுடன், பெரியாருடன் இன்னும் இந்துத்துவா பேசிவந்த தலைவர்களுடன் கூட தன் உரையாடலை நடத்தியிருக்கிறார். இந்தியாவில் முஸ்லீம்கள், பாகிஸ்தான் பிரச்சனை போன்ற ஆய்வுகளை அம்பேத்கர் நடத்தியிருக்கிறார்.

காந்திஜி பயன்படுத்திய 'ஹரிஜன்' என்பதை அம்பேத்கர் பயன்படுத்தவில்லை. அவர் டி சி ( depressed class) என்ற பதத்தைப் பயன்படுத்தினார். வைஸ்ராய் கவுன்சில் மெம்பராக இருந்தபோது ஏராள தொழிலாளர் பிரச்சனைகளைக் கையாண்டுள்ளார்.

அம்பேத்கரின் இந்தியாவில் நாணயம் என்கிற ஆய்வுதான் ரிசர்வ் வங்கி சட்டம் உருவாக வழிவகுத்தது. அதேபோல் நிதிக்கமிஷன் என்கிற மத்திய மாநில நிதிஉறவுகளுக்கான அமைப்பு உருவாகவும் அவரது ஆய்வுகள் அடிப்படையாக இருந்தன. பட்டேலுக்கு சமஸ்தானங்களை ஒன்றிணைத்தவர் என்கிற புகழ்கிடைத்தது. இந்தியா ஒற்றை அரசாக இருக்கவேண்டுமா-மாநிலங்களின் சம்மேளனமாக இருக்கவேண்டுமா என்கிற விவாதத்தையும் முன்னெடுத்தவர் அம்பேத்கர்.

அரசியல் சட்ட உருவாக்க அசெம்பிளி விவாதங்கள் வால்யூம்களாக பதிவாகியுள்ளன. அங்கு இருந்தவர்கள் எல்லோரும் தங்கள் வாதங்களை வலுவாக வைக்கும் ஆற்றல் நிறைந்தவர்கள். வரைவுக்குழு தலைமைப்பாத்திரத்தில் உரிய விளக்கங்களை முன்வைத்து அரசியல் அமைப்பு சட்டம் அற்புதமாக எழுதப்பட தன் தூக்கத்தை தொலைத்தவர் அம்பேத்கர். அவரின் பலபுகழ் வாய்ந்த மேற்கோள்கள் அங்கு உரையாற்றும் போது தரப்பட்டவை.

தேசியம் என்பது குறித்தும் பெரும் விவாதம் எழுந்தது. இந்தியா சாதிகளின் கூட்டமைப்பு என அம்பேத்கர் சமூக யதார்த்தத்தை எடுத்துரைத்தார். உட்புகமுடியாத மூடிய சமூகமாக இந்தியா இருந்து வருகிறது என்றார் அவர். இந்திய சமூகம் ஒருவரை ஒருவர் மதிக்கக்கூடிய சமூகமாக மாறவேண்டும் என அவர் விழைந்தார். 'காம்போசிட் கல்ச்சர்'

எனபதும் ‘சாதியற்ற சமூகம்’ உருவாகுமா என்பதும் அவரது கேள்விகளாக இருந்தது.

இப்படியொரு சமூக அமைப்பு உருவாக்கம் என்பதற்கு நூறு ஆண்டுகள் கூடப்பிடிக்கலாம். இந்தியாவில் மேல்நிலையாக்கம் எவ்வகையில் நடந்துவருகிறது. அனைவரும் மத்தியதரவர்க்கம் என்கிற பொருளாதார நிலை ஏற்பட்டு அது சமூக உறவில் ஜனநாயக வெளியை உருவாக்குமா என்பதே அம்பேத்கரின் கவலையாக இருந்தது.

அம்பேத்கர் இந்துமதத்தை கடுமையாக சாடியிருந்தாலும் அவர் சமய விரோதியல்ல. இந்துமதம் ‘சூப்பர் மனிதர்களின்’ சொர்க்கமாக இருக்கலாம்- சாதாரணமானவர்க்கு அது சாக்கடையாக இருக்கிறது என்றுகூட அவர் எழுதியிருக்கிறார்.

‘My philosophy is based on Religion only’ என்கிற வாக்குமூலத்தை அவர் தருகிறார். அதற்கு சில சிறப்புத்தன்மைகளை அவர் வரையறுக்கிறார். எந்தமதம் வறுமையை போற்றுகிறதோ (ennobling poverty), எந்த மதம் உங்களின் இன்றைய கஷ்டத்திற்கு உங்களின் முன் ஜென்மப் பலன்என காரணம் காட்டுகிறதோ அந்த மதத்தை நான் சகியேன் என்றார். அது மதமேஅல்ல என்றார். எந்த மதம் பகுத்தறிவு காரணகாரிய அறிவிற்கு உட்பட்டு நடக்கிறதோ, சமத்துவமாக மனிதனை நடத்துவதற்கு தயவு தாட்சண்யமின்றி போராடுகிறதோ, பொதுவெளிக்குள் அனைத்து மனிதர்களையும் அனுமதிக்கிறதோ அந்த மதம் இருக்கட்டும் என்றார் அம்பேத்கர். ‘பெண்கள்வந்தால் பாதுகாப்பில்லை’ என்று தடுக்காமல் எந்த மதம் பெண்களும் வரலாம் பாதுகாப்போம் என அனுமதிக்கிறதோ அந்த மதம் இருக்கட்டுமே என இன்று நமக்கு பேசத்தோன்றுகிறது.

மார்க்ஸ் கூட மதம் அபின் என நிறுத்திக்கொள்ளவில்லை. ஒடுக்கப்பட்டவர்களுக்கு மதம் புகலிடம், நிர்கதியான மனிதனுக்கு ஆறுதல் நம்பிக்கை கிடைக்கும் இடம் என்றார். அம்பேத்கருக்கு மதசார்பின்மை என்பது மதநீக்கம் அல்ல. இந்துக்களுக்கு மட்டும் என்றோ முஸ்லீம்களுக்கு மட்டும் என்றோ சட்டம் இயற்றும் இடமாக நாடாளுமன்றம் இருக்கவேண்டாம் என்பது அவர்தம் நிலைப்பாடு.

சமூகக் கொடுமைகளை அனுபவித்த பகுதியிலிருந்து தான் வந்தாலும் நாட்டில் மாற்றம் வருவதற்கு இரத்தக்களறி கூடாது என்றவர் அம்பேத்கர். சாதி ஒழிப்பு பிரச்சனையில் அவர் கம்யூனிஸ்ட்களுடன் விவாதம் செய்தவர். பாட்டாளிவர்க்க சர்வாதிகாரம் என்கிற முழக்கத்தில் அவருக்கு ஏற்பு இல்லை. இந்தியாவிற்கு நாடாளுமன்ற ஜனநாயகமே பொருந்தும் என்றவர். அதன் தனித்துவமான மூன்று கூறுகளான நாடாளுமன்றம், மந்திரிசபை, நீதிமன்றம் ஆகியவற்றின் வெற்றி என்பது அவ்வமைப்புகளில் பொறுப்புக்கு வரும் மனிதர்களைப் பொறுத்தே அமையும். எங்களுக்குள் விவாதித்து நாங்கள் அரசியல் அமைப்புசட்டத்தை நிறைவேற்றியிருந்தாலும் அது மனிதர்களைப் பொறுத்தேவெற்றிப்பெறும் என்றார் அம்பேத்கர். இந்திய அரசியல் அமைப்பு சட்டத்தைப்பற்றிய கிரான்விலி ஆஸ்டின் என்பார் எழுதிய The Indian Constitution: Corner stone of a Nation என்பதில் அம்பேத்கரின் ஆளுமை வியக்கப்பட்டுள்ளது.

இந்திய பிரதமராகவுள்ள திரு மோடி அவர்கள் தன்னைப்போன்ற 'பாத்திரம் தேய்த்த குடும்பத்து பிள்ளை' நாடாளமுடியும் என்பதற்கு அம்பேத்கர் வகுத்த சட்டமே காரணம் என அம்பேத்கர் பிறந்த பகுதி கூட்டமொன்றில் பேசினார்.அதைவிடமுக்கியமாக அம்பேத்கரை 'நவீன மனு' என்றழைத்தார். மனுவை வாழ்நாள் முழுக்க எதிர்த்து போராடியவர் அம்பேத்கர்.

நேபாள காத்தமண்ட் புத்த பிக்குகள் கூட்டம் ஒன்றில் மார்க்ஸா புத்தரா என்கிற விவாதத்தை அம்பேத்கர் எழுப்பினார். அந்த உரைக்கு பின்னர் அவர்கள் அங்கே தந்த பட்டம் நவபௌத்தா என்பதாகும்.

விடுதலை இந்தியாவில் நேருவின் அமைச்சரவையில் அம்பேத்கரும் சட்ட அமைச்சராக பங்கேற்கிறார். நேருவுடன் கருத்து மோதல் ஏற்படுகிறது. 'இந்துகோடு' பிரச்சனையானது. கருத்துவேறுபாடு ஏற்பட்டு அமைச்சரவையிலிருந்து அம்பேத்கர் வெளியேறுகிறார். 1952 தேர்தலில் அம்பேத்கர் தோற்கடிக்கப்படுகிறார். இதுதான் முரண் நிகழ்வு. யார் எதற்காக வாழ்நாள் முழுதும் நிற்கிறார்களோ அதனாலேயே அவர்கள் தோற்கடிக்கப்படுவதும் நிகழ்கிறது. அம்பேத்கர் இராஜ்யசபாவில் இடம் பெறுகிறார்.

பாகிஸ்தானில் தீண்டாமை பிரச்சனை அறிந்து ஜின்னாவிடம் பேசிப்பார்க்கிறார். All untochables you come to India- I will safeguard you என்கிற வேண்டுகோளை விடுக்கிறார். மொழி குறித்த அவரது கருத்துக்கள் முரண்பட்டதாக இருக்கும். இந்தியாவிற்குபொதுமொழி தேவை எனக் கருதினார். அது இந்தியாக இருக்கலாம் என்றார்.

அவர் சோசலிசத்திற்கு எதிரானவராக காட்டிக்கொள்ளவில்லை. 'அரசாங்க சோசலிசம்' எனப் பேசினார்.. நிலப்பிரச்சனையில் ஒரு ஏக்கர் என்றெல்லாம் பிரித்துக்கொடுத்தால அவர்களால் அதை காப்பாற்ற முடியாது எனக் கருதினார். கூட்டு பண்ணைகள் என்றார். அங்கு அவர்கள் சம்பளத்திற்கு பணியாற்றலாம். விவசாய சட்டம் வேண்டும் என்றார்.

இந்தியாவில் சோசலிசம் கொணரவிரும்பும் கம்யூனிஸ்ட்களிடம் மிக முக்கியகேள்வி ஒன்றை அவர் எழுப்பினார். இந்த நாட்டின் சமூகபிரச்சனையாக சாதியை பார்க்காமல் கொடுமைகளை எதிர்த்து போராடாமல் சோசலிசத்தைக் கொணரமுடியுமா என்பதே அக்கேள்வி. ஏன் அரசியல் அமைப்பு சட்டத்தில் சோசலிசம் பயன்படுத்தப்படவில்லை என்ற கேள்வி அவரிடம் எழுப்பட்டபோது வழிகாட்டுக் நெறிகளை படித்து புரிந்துகொள்ளுங்கள் அதைவிட சிறந்த 'சோசலிச பிராஜக்ட்' என்ன வேண்டும் என மறுமொழி தந்தார்.

அரசியல் சட்டத்தில் தங்களுக்கு பிடித்த ஷரத்து எது என அவரிடம் கேட்டபோது ஷரத்து 17- உயிர் வாழும் உரிமை என்றார். அதில்தான் தீண்டாமை குற்றம் என்பது இருக்கிறது. ஷரத்து 15( 4 ) இட ஒதுக்கீடு பற்றியது , 16 (4) கல்வி வேலைஉரிமை பற்றியது. ஆனால் ஷரத்து 32 தான் எனக்கு பிடிக்கும் என்றார். அதில்தான் constitiuional remedy இருக்கிறது. எவராக இருந்தாலும் அனைவரும் சட்டத்திற்கு உட்பட்டு பிரச்சனையை எழுப்பவும் தீர்வுகளைப் பெறவும் அந்த ஷரத்து வழிசெய்கிறது - சட்டரீதியான மருந்தாகிறது என்றார்.

இந்தியாவில் விடுதலை காரணமாக அரசியல் ஜனநாயகம் ஒரு மனிதன் ஒருவாக்கு கிடைத்திருக்கலாம். ஆனால் சமூக மதிப்பு அப்படி இருக்கிறதா- ஒருமனிதன் ஒரே மதிப்பு இருக்கிறதா என அவர் மிக முக்கிய கேள்வியை

அனைவரின் மனசாட்சியை உலுக்கும் வகையில் எழுப்பினார். அப்படி ஒரேமதிப்பு என்பது வராவிடில் இந்திய ஜனநாயகம் இரத்தக் களறியை சந்திக்க நேரும் என்றார். இந்திய குடியரசு நோஞ்சான்களின் குடியரசாக வளராமல் வறுமை நீக்கப்பட்ட சம சமூக மதிப்புள்ள மனிதர்களின் குடியரசாக வேண்டும் என்கிற பெரும் கனா அவரிடம் இருந்தது.

# 2. பாபாசாகேப் அம்பேத்கர் அன்றாட வாழ்க்கை துளிகள்

பாபா சாகேப் தான் மணமுடிக்க இருந்த டாக்டர் சாரதா கபீருக்கு ஒரு முறை எழுதிய கடிதத்தில் “எனது கடந்த காலத்தை குறித்து ஏதும் அக்கரையற்று இருக்கிறாய். மராத்தி பத்திரிகைகளில் அவை விரவி கிடக்கின்றன” என குறிப்பிட்டிருந்தார். அவருடைய அன்றாட வாழ்க்கை குறித்த செய்திகள் மிகக்குறைவாகவே வெளிக்கொணரப்பட்டுள்ளன. அவருடன் நெருங்கி இருந்தவர்களின் செய்திகளாகவும், பதிவுகளாகவும் அவை கிடைக்கின்றன. அவரது பேச்சும் எழுத்துமான தொகுதிகளுக்கு ஏற்பட்ட கவனம் அவரின் ஆளுமை உருவாக்கம் என்பதில் காணப்படவில்லை.

பாபா சாகேப் வீட்டிற்கு சென்று துணை நின்ற நெருங்கிய உதவியாளர்களாக நானக் சந்த் ரட்டு, தேவி தயாள், சங்கரானந்த் சாஸ்திரி, பகவான்தாஸ், நாம்தியோ நிம்கடே ஆகியோரை குறிப்பிடலாம். அவர்களைப் போன்ற நெருங்கி நின்றவர்களின் பதிவிலிருந்து சில முக்கிய அம்சங்கள் இங்கு இடம்பெற்றுள்ளன.

பாபாசாகேப் வைஸ்ராய் கவுன்சிலில் தொழிலாளர் அமைச்சராக இருந்தபோது பூரி ஜகந்நாதர் கோவிலில் அவர் அனுமதிக்கப்படவில்லை. கல்கத்தாவில் விருந்துக்கு அழைக்கப்பட்ட வீட்டில் வேலைக்காரர்களின் புறக்கணிப்புக்கு உள்ளாக நேர்ந்தது. ஷெர்வாணி, குர்தா, லுங்கி உடைகள் அணிவதில் ஆர்வமாக இருப்பார் அம்பேத்கர். மராத்தியர் என்ற பெருமிதம் அவரிடம் பொங்கும். புத்தகங்களுடன் அவர் வாழ்ந்து மறைந்தார்- போன்ற பல தகவல்களை அம்பேத்கருடன் நின்ற தோழர்கள் பதிவிட்டுள்ளனர்.

தயா பவார் மராத்தியில் முதல் தலித் சுய வரலாற்றை எழுதியவர். கவிஞர். அவரின் பதிவிலிருந்து சில செய்திகளைப் பார்ப்போம்.

டாக்டர் அம்பேத்கர் எரிமலையைப் போல சமூகத்தை உலுக்கினார்.

“மற்றவர்களின் அரண்மனை மீது விருப்பம் கொள்ளாதே. உனது குடில்களை கோட்டையாக்கு” என்பார். இங்கு அரண்மனையை காங்கிரஸின் குறியீடாகவும் ரிபப்ளிகன் கட்சியை குடிலாகவும் உருவகப்படுத்திக் கொள்ளலாம். அவரை காண்பதற்காக ஏராள இளைஞர்கள் பல மைல்கள் நடந்தும் மிதிவண்டியிலும் வருவர். நகர்புறங்களில் நமது ‘மஹர்’ மக்களுக்கு நம்மால் ஏதாவது செய்ய முடிகிறது. கிராமப்புறங்களில் கொடும் அடக்குமுறைக்கு உள்ளாகும் அவர்களின் துயர் துடைக்க என்ன செய்வது எனசொல்லும் போதே அம்பேத்கர் கண்களில் நீர் வழிவதை நாங்கள் கண்டிருக்கிறோம்.

டாக்டர் அம்பேத்கர் மறைவு என்ற செய்தி வந்த போது கதவில் சாய்ந்து கொண்டு விம்மி அழுதேன். நான் பணிபுரிந்த கால்நடை கல்லூரியில் விடுப்பு கேட்கவேண்டும். பணியில் அமர்ந்து 3 மாதங்களே ஆகியிருந்தன. அவரின் பூதவுடல் தில்லியிலிருந்து மும்பைக்கு எடுத்து செல்லப்பட்டது.

டாக்டர் அம்பேத்கர் மறைவை சுட்டிக்காட்டி நான் விடுப்பு கோரியிருந்தேன். எனது உயரதிகாரி கோபமுற்றார். அவரோ பெரும் தேசியதலைவர். நீ அரசு ஊழியன். தனிப்பட்ட காரணங்களை தெரிவித்துவிட்டு விண்ணப்பம் கொடு என்றார். இருட்டு குகையிலிருந்த எங்களை மீட்ட எங்கள் குடும்ப உறுப்பினர் பாபாசாகேப் என்று கூறிவிட்டு அனுமதிக்கு காத்திராமல் அவரை காண சென்று விட்டேன்.

திலகரை தவிர வேறு எந்த தலைவருக்கும் இறுதி ஊர்வலத்தில் இந்த அளவு மக்கள் திரளவில்லை. ஆண்களும் பெண்களும் நெஞ்சிலே அடித்துக் கொண்டு அழுவதை கண்டேன்.

சாந்தாபாய் கிருஷ்ணாஜி காம்ப்ளே சோலப்பூரின் முதல் தலித் ஆசிரியப் பெண்மணி. பின்னர் கல்வி அதிகாரி அளவிற்கு உயர்ந்தவர். அவரும் தன்வரலாறு ஒன்றை எழுதியிருக்கிறார். சாந்தாபாய் பதிவிலிருந்து சில தகவல்களை காண்போம்..

பாபா சாகேப் மூக்நாயக் என்ற பத்திரிகையை ஆரம்பித்திருந்தார். தியந்தேவ் கோலப் என்பார் அப்பத்திரிகைக்குரிய நிதியை மோசடி

செய்துவிட்டார். டாக்டர் அம்பேத்கருக்கு எதிராகவும் சென்றார். கோலப் வீட்டருகில் பாபாசாகேப் கூட்டம் ஒன்றில் உரையாற்றும்போது கோலப் கதவை சாத்திக்கொண்டு உள்ளிருந்தார். கூட்ட முடிவில் திர்மரே மாஸ்டரை அம்பேத்கார் அழைத்தார். மறுநாள் காலை பார்க்க சென்றபோது மலம் கழிக்க 'ஜக்கை' தூக்கிக்கொண்டு மிகச் சாதாரணமாக வேட்டியை ஒரு கையால் உயர்த்திப்பிடித்துக்கொண்டு அம்பேத்கர் கண்ணில்பட்டதை பார்த்தோம். அவரது எளிமையை எங்களால் பலமுறை காணமுடிந்துள்ளது.

கூட்டுகிற வேலைக்கு மகர் பெண் ஒருவரின் விண்ணப்பத்தை பாபசாகேப் காட்டுகிறார். பிராம்மணர்கள் வாழும் தெருவைக் கூட்ட எனக்கு வாய்ப்பு வேண்டும். அங்கு ஏதாவது சாப்பிடக்கிடைக்கும் என அதில் எழுதப்பட்டிருந்தது. அதைப் படித்து பாபாசாகேப் நாம் நம்முடைய மக்கள் மேம்பாட்டிற்கு எவ்வளவு கடுமையாக போராடுகிறோம். இது எதைக்காட்டுகிறது என தனது கவலையையும் சினத்தையும் வெளிப்படுத்தினார். சாக்கடைக் கூட சுத்தமாகிவிடுமய்யா நாம் எப்போது என்கிற கோபம் அவரிடம் வெளிப்பட்டது (Even gutters will improve but not our society page 41 ATAD)

ஒருமுறை பாபாசாகேப் அவர்களை வரவேற்கும் முகத்தான் பெண்கள் ஆரத்தி விளக்குடன் அணிதிரண்டு நின்றனர். பெண் குழந்தை ஒன்று அம்பேத்கார் நீடூழி வாழ்க என முழக்கம் எழுப்பியது. குழந்தையே நான் ஏன் நீடூழி வாழவேண்டும். தீண்டப்படாதவர் என வஞ்சிக்கப்பட்டவர்களுக்கு என்னால் முடிந்ததை செய்திருக்கிறேன் அவ்வளவுதான் என புகழ்பவர்களை நிதானப்படுத்தியதை பார்த்ததாக காம்ப்ளே பதிவு செல்கிறது. நன்கு கல்வி பயிலுங்கள்- செத்த மிருகங்களை இழுத்து வராதீர்கள்- உண்ணாதீர்கள் என கூட்டத்தில் அம்பேத்கர் உரையாற்றினார்.

பேபி கொண்டிபா காம்ப்ளே மகர் இன மக்கள் பற்றியும் தன் சுயவரலாற்றையும் எழுதிய பெண்மணி. அவரது மராத்தி எழுத்துக்கள் The Prisions We Broke என வந்துள்ளது. அவரின் பதிவிலிருந்து...

ஒருமுறை மகர் மக்கள் நிறைந்த ஜேஜூரி பகுதிக்கு அம்பேத்கர் காரில் வந்து இறங்கினார். அவரது உடை கார் ஆகியவவற்றைப்பார்த்து

‘அரே நம்மவர் ஒருவர்’ இப்படியெல்லாம் ஆகி உயரமுடியுமா என பலர் ஆச்சர்யத்துடன் வியந்து பார்த்தனர். அம்பேத்கர் அங்கு உரையாற்றினார். அவ்வுரையின் சாரம் இவ்வாறு அமைந்தது.

“காலில் செருப்புகூட இல்லாமல் பல மைல்கள் நடந்து தள்ளாத பெரியவர்களும் கம்பு ஊன்றி வந்துள்ளதை பார்க்கிறேன். உங்களது கடவுளோ பக்தி உங்களை ஏன் காப்பாற்ற தவறுகின்றது. நல்ல உடையோ உணவோ கூட கிடைப்பதில்லை. ஏன் இந்த நிலை. தீர்க்க தவறும் கடவுளை நோக்கி இன்னும் ஏன் ஓடிக்கொண்டிருக்கிறீர்கள். உங்கள் நிலையை நீங்கள் உணருங்கள்.

உயர்தட்டார் எனக்கூறிக்கொள்பவர்கள் வீசும் குப்பைகளை அசுத்தங்களை சுத்தம் செய்கிறீர்கள். செத்த மாட்டை இழுத்துச் செல்கிறீர்கள். ஏன் இறைவன் உங்களைப் பார்த்து பாவப்பட்டு இரங்கவில்லை. மாற்றி யோசிக்கவேண்டிய நேரமிது. குழந்தைகளை கல்வி கற்கச்செய்து அதன் விளைவுகளைப் பாருங்கள். மனிதர்களாகிய நாம் அப்படி வாழ எல்லாத் தகுதியும் உடையவர்கள் என்பதை படித்த உங்கள் குழந்தைகள் மற்றவருக்கு சொல்லித்தருவர் ”

வசந்த் மூன் தன் அளவில் நாடறியப்பட்டவர். அம்பேத்கரின் நூல்தொகைகளை தொகுத்தவர். 1956 புத்தமத மாறும் நிகழ்வில் நாக்பூரில் பங்கேற்றவர். அம்பேத்கரின் வாழ்க்கை வரலாறு எழுதியவர். அவரின் பதிவிலிருந்து சில பகுதிகள்....

எல்பின்ஸ்டன் கல்லூரிக்கு ஜனவரி 3 1905ல் பீமா அம்பேத்கர் வந்து சேர்கிறார். ஷேக்ஸ்பியரின் ‘கிங் லியர்’ போலவே ‘ஓயிஸ் கேர்ல்’ என்பதை எழுதி அவர் அரங்கேற்றினார். விடியற்காலை 2 மணிக்கே எழுந்து பாடங்களை படிப்பார். மாலையில் கிரிக்கெட் விளையாடுவார். பல மாணவர்கள் பணக்கார குடும்பம் சார்ந்தவர்கள். பீமாவோ குடும்ப நகைகளை அடமானம் வைத்து கற்க அனுப்பப்பட்டவர்.

பீமா ஆங்கிலம் மற்றும் பெர்சியனில் தேர்ச்சியுடன் இருந்தார். கணிதத்தில் பலவீனம் இருந்தது. பேராசிரியர் இரானி, முல்லர்

ஆகியோர் அன்புடன் இருந்தனர். முல்லர் பீமாவிற்கு சட்டைகளைக்கூட தருவார். தேர்வில் 884க்கு பீமா 282 வாங்கியிருந்தார். 1910ல் அவர் மதிப்பெண் ஆங்கிலப்பாடத்தில் 200க்கு 69, மராத்தியில் 52, கணிதத்தில் 60, பொருளாதாரத்தில் 42 என்பதாக இருந்தது. அவர் 1912ல் பட்டப்படிப்பை முடிக்கும்போது 750க்கு 282 வாங்கியிருந்தார்.

அமெரிக்காவில் தங்கியிருந்த அம்பேத்கர் 1916ல் பெரோஷா மேத்தா மறைவையும் அவருக்கு சிலை வைக்கும் செய்தியையும் அறிந்தார். உடன் பம்பாய் கிரானிக்களுக்கு கடிதம் எழுதினார். சிலைக்கு பதிலாக நினைவு நூலகம் வைத்தால் பயனளிக்குமே என்றார். சமூகம் பயன்படுத்திக்கொண்டு வளர நூலகம் உதவிபுரியும் எனக் குறிப்பிட்டிருந்தார்.

அம்பேத்கர் பேராசிரியராக இருந்தபோது கல்லூரியில் மாணவர் விடைத்தாள்கள் திருத்தம் பற்றிய விவாதத்தை ராமச்சந்திர பனவுதா தொடங்கினார். மிகப்பொறுப்புடன் பாபாசாகேப் அதற்கு பதில் தந்தார். நான் 50 சதம் உள்ளடக்கத்திற்கும் மீதி 50 சதம் வெளிப்படுத்தும் முறைக்கும் என வைத்துக்கொள்வேன். தகுதியான மாணவர்களுக்கு 60 சதத்திற்கு மேல் கொடுத்துவிடுவேன். ஒருமுறை 150க்கு 144 கூட நான் கொடுக்கும் அளவு நேர்த்தியாக விடை இருந்தது. இதைப்பார்த்த மூத்த கண்காணிப்பாளர் வேறு சிலரிடமும் அப்பேப்பரை தந்தார். சிலர் கூடுதலாகவும், சிலர் குறைவாகவும் மதிப்பிட்டிருந்தனர். இறுதியில் நான் மதிப்பிட்ட 144 என்பதே ஏற்கப்பட்டது என அம்பேத்கர் தெரிவித்தார். தாழ்த்தப்பட்ட மாணவர் என்பதால் நான் மார்க்கில் உதவிசெய்வேன் என வந்தால் அவர்களுக்கு ஏமாற்றமே மிஞ்சும் என்கிற செய்திதனையும் அம்பேத்கர் குறிப்பிட்டார்.

வறுமையிலும் செம்மை என்பதை சொல்லும் பதிவும் இருக்கிறது. அம்பேத்கருக்கு அவரது 17ஆம் வயதில் 1908ல் திருமணம் நடந்தது. அவர் இங்கிலாந்து செல்ல நேர்ந்தபோது, இருக்கின்ற பணத்தை துணைவியார் ரமாபாய் அவர்களிடம் கொடுத்து சென்றார். பணம் தீர்ந்த நிலையில் ரமாபாய் சகோதரர் சங்கரராவ், சகோதரி கெளரிபாய் தினக்கூலிக்கு சென்று எட்டணா சம்பாதித்து வந்து குடும்பம் நடக்கவேண்டியிருந்தது.

குடும்ப சூழலை விளக்கி லண்டனில் இருந்த அம்பேத்கருக்கு

துணைவியார் கடிதம் எழுதினார். நானும் உணவின்றி படுக்கச்செல்லும் சூழலில்தான் இருக்கிறேன். இருப்பதில் கொஞ்சம் அனுப்புகிறேன். உன்னிடம் இருக்கும் நகையை விற்றுக்கொள், நான் திரும்பி வந்தவுடன் வாங்கித் தருகிறேன் என அம்பேத்கர் பதில் எழுதுகிறார். அதே நேரத்தில் மகன் யஷ்வந்த் படிப்பை பார்த்துக்கொள் எனவும் தெரிவிக்கிறார். சில சமூகத் தொண்டர்கள் செய்ய வந்த உதவியை சுயமரியாதை காரணமாக ரமாபாய் மறுத்துவிட்டார் எனவும் நாம் அறியமுடிகிறது.

1926ல் பிராம்மணரல்லாத பாக்தே, ஜாவல்கர் போன்றவர்கள் திலகரை தாக்கி எழுதியதாக பிராம்மணர் சிலர் வழக்கு தொடுத்தனர். அம்பேத்கர் பிராம்மணர் அல்லாதவர் பக்கம் நின்று அவர்களை பாதுகாத்தார். 1933ல் எம் என் ராய் தன்னை மறைத்துக்கொண்டு மகமது என்ற பெயரில் இயங்கிக்கொண்டிருந்தார். அம்பேத்கர் அவர்களையும் ராய் அதே பெயரில் சந்தித்தார். சந்திப்பு முடிந்தவுடன் இவர் பெங்காலி இந்துவாகவே இருக்கமுடியும், இஸ்லாமியராக இருக்கமுடியாது என்பதை கண்டுகொண்டு பிரதான் என உடன் இருந்தவரிடம் தெரிவித்தார். அதே ஆண்டில்தான் அவர் ஹீரோ வழிபாடுகளை விட்டொழிப்போம் என்கிற விழிப்புணர்வை தந்துகொண்டிருந்தார்.

பாலியல் பிரச்சனைகளை கற்பிப்பது என்கிற வகையில் ஆர் டி கார்வே ‘சமஜ்ஸ்வஸ்தயா’ என்கிற இதழை நடத்தி வந்தார். அவர் ஆபாசமாக எழுதிவிட்டார் என வழக்கு ஒன்று வந்தது. அம்பேத்கர் வழக்காடி அவரின் பாலியல் கல்விக்கு ஆதரவாக நின்று அவரை பாதுகாத்தார். அதே போல் 1938 டிசம்பரில் பம்பாய் சட்டமன்றத்தில் குடும்பக் கட்டுபாடு பில் ஒன்றை பி. ஜே .ரோஹம் மூலம் அம்பேத்கர் கொணர முயற்சித்தார். பில் தோற்றது. ஆனாலும் பிள்ளைப்பேறு கட்டுப்பாடு என்பதை புனிதம் என்பதற்கெல்லாம் அப்பாற்பட்டு சமூக பிரச்னை என்கிற விவாதம் எழுந்திட காரணமானார் பாபாசாகேப்.

ரமாபாய் அவர்கள் 1935 மே 26 அன்று காலமானார். இளம் வயதிலேயே சுமைகளையும் பொறுப்புகளையும் தாங்கி திறம்பட குடும்ப பணிகளை செய்தவர் ரமாபாய். தியாக சித்தம் கொண்டவராக விளங்கியவர்.

வருகின்றவர்களை உபசரிப்பது, தினம் 12 தலித் குழந்தைகளுக்கு உணவு ஏற்பாடு செய்வது போன்றவற்றை மனம் உவந்து செய்தவர். வெளியே சில கிரிமினல் பேர்வழிகளின் தாக்குதல்களை சமாளித்தவர்.

நான் இந்துவாக பிறந்திருக்கலாம், ஆனால் அப்படி சாகப்போவதில்லை என அம்பேத்கார் அக் 13, 1935ல் பகிரங்கமாக அறிவித்தார். தலித்கள் முஸ்லீம்களாக மதம் மாறினால் 5 கோடிவரை செலவழிக்க தயார் என்று ஹைதாராபாத் நிஜாம் சொல்லியிருந்தார். பிஷப்கள் அம்பேத்கருடன் தொடர்புகொண்டனர். காந்தியடிகள் குறித்து எழுதிய ஸ்டான்லி ஜோன்ஸ் கூட அம்பேத்கரை சந்தித்தார். கிறிஸ்துவர்கள் சாதிமுறையை ஒழித்துவிடவில்லையே என அம்பேத்கர் பதில்சொல்லி அனுப்பிவிட்டார். அம்பேத்கரின் வெளியிடப்படாத கட்டுரையான 'Christianizing the untouchables and condition of converts' என்ற கட்டுரையில் அம்பேத்கர் இதனை விளக்கியிருந்ததாக வசந்த் மூன் சொல்கிறார்.

பொற்கோயில் பொறுப்பாளர்களும் அம்பேத்கரை தொடர்புகொண்டனர். என் கவனத்தில் சீக்கியர் மதம் இருக்கிறது என அம்பேத்கர் பதில் தந்தார். அவர் சீக்கியர் மாநாடு ஒன்றிலும் பங்கேற்றார். ஜூன் 10, 1936ல் சிலோன் புத்த துறவி லோக்நாத் புத்தமதத்தில் இணையுமாறு வேண்டுகோள் கொடுக்கிறார். அப்போதே அம்பேத்கர் தனது வேண்டுகோளை ஏற்றிருந்தால் பர்மா வெளியேறி இருக்காது என்கிற கருத்து லோக்நாத் அவர்களுக்கு இருந்தது.

சுத்திகரண் இயக்க ஆதரவாளர் விநாயக் மகராஜ் மசுரேக்கருடன் அம்பேத்கர் நடத்திய விவாதத்தில் மதம் மாறாமல் இருக்க வேண்டுமெனில் சில நிபந்தனைகளை பரிசீலித்து முடிவெடுக்கவேண்டும் என்றார். இந்து மகாசபா இரு தீர்மானங்களை நிறைவேற்றவேண்டும். பிறப்பின் அடிப்படையில் சாதி கூடாது, ஒரே வர்ணம்தான் என்பனவே அவை. அப்போது அம்பேத்கரை எதிர்த்து இந்துமதத்தை உயர்த்திப்பிடித்து வந்தவர் கே கே சாகத். அவரும் தலித் பகுதியிலிருந்தே வந்தவர். அவரை சங்கராச்சாரியாராக அமர்த்துவதை ஏற்பீர்களா என்பதும் அம்பேத்கரின் மற்றொரு கேள்வி. என்ன விடை கிடைத்திருக்கும் என்பதை அனைவரும்

ஊகித்துக்கொள்ளமுடியும். அப்படிச்செய்தால் மதமாற்றம் செய்யவேண்டுமா எனக்கூட யோசிக்கலாம் என்றார் அம்பேத்கர்.

ஜூன்5 1952ல் அமெரிக்கா கொலம்பியா பல்கலைக்கழகம் டாக்டர் பட்டம் கொடுக்க அம்பேத்கரை அழைத்து இருந்தது. முன்னதாக பம்பாய் கிரிக்கெட் மைதானத்தில் அம்பேத்கர் கௌரவிப்பு விருந்து நடந்தது. அமெரிக்கா சென்று தேசத்திற்கு எதிரான கருத்துக்களை பேசிவிடுவேன் என எவரும் அஞ்சவேண்டாம். வட்டமேஜையில்கூட எனது தேசபக்தி காந்தியை விஞ்சி 200 மைல் முன்னதாகவே இருந்தது என்றார் அம்பேத்கர்.

நாக்பூர் நகருக்கு 1953ல் அம்பேத்கார் வருகைப்புரிந்து மௌண்ட் ஹோட்டலில் துணவியாருடன் தங்கியிருந்தார். வசந்த்மூன் போன்ற இளைஞர்கள் தாங்கள் நடத்திய பத்திரிகையை காட்டினர். முதலில் 'புத்திசம்' ஏற்றவர்கள் பிராம்மணர்கள்- பின்னால் அதை அவர்கள் corrupt செய்துவிட்டனர் என விவாதம் சென்றது.

புத்தமதத்திற்கு மாறினால் நமது கிராம மக்கள் காலம்காலமாக செய்துவரும் சடங்குகளில் , திருமணமுறைகளிலும் மாற்றம் வேண்டுமா என அம்பேத்கர் அவர்களிடம் கேட்டபோது, சில அவசியமான சடங்குகள் தொடரவேண்டியிருக்கலாம். மறுபிறப்பை எப்படி சொல்வது என மூன் கேட்க, தான் அணையாமல் மெழுகுவர்த்தி மற்ற மெழுகுவர்த்தியை ஏற்ற உதவுவது போல புரிந்துகொள்ளலாம் என்றார் அம்பேத்கர். உட்சாதி பிரச்சனைகள் இல்லாமல் இயக்கம் கட்ட முயற்சிக்கவேண்டும் என அம்பேத்கர் அறிவுறுத்தினார்.

பகவான் தாஸ் பாபசாகேப் அம்பேத்கரிடம் ஆய்வு உதவியாளராக சேர்ந்தவர். இரண்டாம் உலகப்போர் காலத்தில் ஏர்போர்ஸ் ராணுவ சேவையில் ரடார் இயக்கப் பணியாற்றியவர், அவரின் பதிவை பார்ப்போம்.

அம்பேத்கர் வீட்டில் இருந்தால் அதிகநேரம் நூலகத்தில் செலவழிப்பார். வந்திருந்தவர்களுடன் விவாதித்து முடித்துவிட்டால் படிப்பில் கவனம் செலுத்த துவங்கிவிடுவார். சில புத்தகங்களை கையில் அடுக்கிக்கொண்டு வராந்தாவில் வந்தமர்ந்து படிப்பார். ஒருமுறை சார்லஸ் டார்வினை

படித்துக்கொண்டிருந்தபோது வலிமையானது மட்டும் பிழைக்கும் என்பதை ஏற்கமுடியவில்லை என்றார். பகவான் தாஸ் 'அதற்காக டார்வின் எழுதவில்லையே' என சொன்னபோது கேட்டுவிட்டு அமைதியானார். என்ன 'MA Anthropology' முடித்துவிட்டாயா எனக்கேட்டார். என்னிடம் கூட ஏராள டிகிரி பட்டங்கள் இருக்கிறது. அறிவை பயன்படுத்தாவிட்டால் பட்டங்களால் என்ன பயன் என்றார்.

துப்புரவு பணியாளர்கள் என்ற பகுதியினர் பற்றிய உரையாடல் வந்தபோது முஸ்லீம்கள் வந்தபின்னர் ஏற்படுத்தப்பட்ட பகுதி என அம்பேத்கர் தன் கருத்தை வெளிப்படுத்தினார். புத்த பிரதிகளில் குறிப்பு இருக்கிறது, ஹீவான் சுவாங் பேசுகிறாரே என பகவன் தாஸ் குறிப்பிட்டார். அப்படியா நான் பார்க்கவேண்டுமே என அம்பேத்கர் ஆர்வம் காட்டினார். கழிப்பறைகள் சுத்தம் பற்றிய குறிப்புகளையும், பாஹியான் சண்டாளர் என பயன்படுத்தியுள்ளதையும் பகவன் தாஸ் எடுத்துக்காட்டினார். அருமை , பாராட்டுகள் என்றார் அம்பேத்கர். இது பற்றி புத்தகம் எழுதுங்கள், நானே முகவுரை எழுதி தருகிறேன் என உற்சாகப்படுத்தினார்.

முல்க்ராஜ் ஆனந்த் ஆங்கில நாவலாசிரியர், எழுத்தாளர். அவரின் புகழ்வாய்ந்த முதல் நாவல் untouchable . பாபாசாகேப் அவர்களுடன் மே 1950ல் முல்க்ராஜ் நடத்திய உரையாடலில் அம்பேத்கர் முன்வைத்த கருத்துக்களின் சுருக்கம் கீழே சொல்லப்படுகிறது.

நமஸ்கார் என்பதை விடுத்து புத்த வணக்கமான 'ஓம் மணி பத்மாய' எனப்படும் விழிப்படைவோம் என்கிற விளித்தலையே அம்பேத்கர் செய்தார். நமஸ்கார் என்பது கீழ்ப்படிதல் நிலையையே உணர்த்துகிறது என்றார். நமது அரசியல் அமைப்பு சட்டம் மதசார்பற்ற செக்யூலர் சோசலிஸ்ட் ஜனநாயக இலட்சியத்தை முன்மொழிகிறது. நிலம் அரசிற்கு சொந்தம் என்றாகி பயன்படுத்தும் உரிமை மட்டும் இருந்தால் அங்கு சுரண்டல் நிலவாது. பல தாழ்த்தப்பட்ட குடும்பங்களுக்கு குத்தகை உரிமைக்கூட இல்லாத நிலைதான் இருக்கிறது.

வேலையை அடிப்படை உரிமையாக்க முடியாதா எனக்கேட்டதற்கு நான் அரசியல் சட்ட உருவாக்க உறுப்பினர்களில் ஒருவன் என்கிற 'லிமிட்டேஷன்'

இருக்கிறது என்றார். அப்போது நீங்கள் சிங்கங்கள் மத்தியில் இருந்த ஆடுதானா என்கிற பதில் கேள்வி வந்தபோது, நான் கர்ஜித்துதான் வருகிறேன் என பொறுமையாக பதிலைத் தந்தார். மகாத்மா காந்தி பற்றி உரையாடல் திரும்பியபோது, அவர் அரிஜனங்களுக்காக நிற்கிறார் என எடுத்துக்கொண்டாலும் வர்ணாஸ்ரம தர்மம் என்றே பேசிவருகிறார் என்றார் அம்பேத்கர். ஹரி என விளித்தால் அது புகழ், பாராட்டு என நினைத்துக்கொள்கிறார். நிலைமைகள் மாறவில்லையே என்றார் அம்பேத்கர்.

U R ராவ் மகாத்மா காந்தியின் நூல்தொகுப்பிற்கு துணையாக நின்றவர். அவர் அம்பேத்கரின் புத்தக பதிப்பிற்கும் பணியாற்றியவர். தாக்கர் அண்ட் கோ புகழ்வாய்ந்த புத்தக நிறுவனம். காந்திஜி மீது பற்றுக்கொண்ட ராவ் அதில் பணியாற்றிக் கொண்டிருந்தபோது அம்பேத்கர் அவர்களை அடிக்கடி சந்திக்கவும் உரையாடவும் வாய்ப்பு பெற்றார். ராவ் அவர்களின் பதிவிலிருந்து ..

தாக்கர் அண்ட் கோ நிறுவனத்திற்கு தன் புத்தகங்களை பதிப்பிக்கவும், பல புதிய வெளியீடுகளை பெறவும் அம்பேத்கர் வருவார். Thoughts on Pakistan போதுதான் ராவ் அம்பேத்கருடன் நெருங்க வாய்ப்பு கிட்டியது. பதிப்பாளர் உரையில் கூடுதலாக ஏதும் சொல்லிவிடக்கூடாது, வாசகர்கள் புரிந்து கொண்டாடவேண்டும் என்பது ராவின் நிலைப்பாடு. அம்பேத்கர் விஷயத்தில் இப்படி கறார் தன்மை தேவையா என நிறுவன பொறுப்பாளர்கள் தயங்கினர்.

பதிப்பாளர் குறிப்பை அம்பேத்கர் பார்த்தார். ராவ் எழுதியதா என வினவினார். ராவ் அவர்களை பாபாசாகேப் தன் கண்ணாடியை இறக்கிவிட்டுக்கொண்டு ஏற இறங்க பார்த்தார். ராவ் தன்னிலை விளக்கம் அளித்தார். நிறுவனம் என்ற வகையில் தனது பிராண்ட்களின் பெருமிதம் வெளியிலிருந்து வரவேண்டும் என நீங்கள் சொல்வதும் சரிதான் என்றார் அம்பேத்கர்.

அடுத்த புத்தகம் ‘காந்தியும் காங்கிரசும் என்ன செய்துவிட்டார்கள்’ 1945 ஜூலையில் தயாரானது. ராவ் தனக்கு அப்புத்தகத்தில் பல விஷயங்கள் உவப்பாக இல்லை என்றார். அப்புத்தக வேலையில் ஈடுபட்டிருந்தபோது,

என்மீது பெரும் விமர்சனம் வரலாம் என அம்பேத்கர் கூறினார்.. நான் தாழ்த்தப்பட்டவர்களுக்காகவும், வெளிநாட்டினர் பார்வைக்காகவும்தான் இப்புத்தகத்தை எழுதியிருக்கிறேன் என்றார். ராஜாஜியின் மறுப்பு புத்தகம் வந்ததையும் ராவ் பதிவு செய்கிறார்.

தாக்கர் நிறுவனத்தில் பார்வைக்கு வைக்கப்பட்ட புத்தக அலமாரியில் மகாத்மா பற்றிய புத்தகமும் இருந்தது. அதைப்பார்வையிட்டுக்கொண்டே வந்த பாபாசாகேப் அந்த கிழவர் பற்றி இன்னும் எவ்வளவு புத்தகங்கள் எழுதுவார்கள் என வினவினார். அவர் படியேறிவந்த இரைப்புடன் இருந்தார். அப்போது ராவ் டாக்டரிடம் இன்னும் ஒரு புத்தகம் கூட தேவைப்படலாம், அதை டாக்டரே எழுதலாம் என்றார். யார் படிப்பார்கள் என அம்பேத்கர் வினவினார். கண்டிப்பாக பதிப்பாளர் என்ற வகையில் நாங்கள் படிப்போமே என்றார் ராவ். இருவரும் சிரித்து மகிழ்ந்தனர்.

ராவ் அவர்களிடம் வேறொருமுறை அம்பேத்கர் கேள்வி ஒன்றை எழுப்பினார். காந்திஜி என்ன மகாத்மாவா என்பதுதான் அக்கேள்வி. அப்படித்தான் எல்லோரும் சொல்கிறார்கள் என்றார் ராவ். ராவ் எழுதிய கட்டுரைகள் குறித்துதான் அம்பேத்கர் உரையாடலை துவங்கினார் என ராவ் புரிந்துகொண்டு, நான் மிகச் சிறிய மனிதன் என்றார். பெரிய மனிதர்கள் அவரை மகாத்மா என்றே சொல்கிறார்கள் என்றார். யார் அந்த பெரிய மனிதர்கள் என்றார் அம்பேத்கர். டாக்டர் ராதாகிருஷ்ணன் தொகுப்பை தாங்கள் பார்த்திருப்பீர்கள் என நம்புகிறேன் என்றார் ராவ்.

என்னைப்பொறுத்தவரை காந்தி அவர்கள் ‘ஹம்பக்’ என ஒளிவு மறைவு ஏதுமின்றி அம்பேத்கர் பதில் தந்தார். ராவ் அவர்கள் ஒருவகையில் நாம் எல்லோருமே ஹம்பக் தான் என விவாதத்தை நீட்டினார். அம்பேத்கர் சிரித்துக்கொண்டே அருகில் இருந்த நிறுவன பொறுப்பாளர்களிடம் ராவ் நம் எல்லோரையும் ஹம்பக் என்கிறார் என்றார். மிக முக்கியமான விவாதங்களில் கூட தன் கருத்துக்களை வெளிப்படையாக, அதே நேரத்தில் தனிப்பட்ட உறவுகளில் கவனத்துடன் அம்பேத்கர் வெளிப்படுத்தியதை நம்மால் அறியமுடிகிறது. அம்பேத்கர் மனதின் ஆழத்தில் காந்திஜி குறித்து மரியாதை இருந்ததை தான் உணர்ந்ததாகவும் ராவ் பதிவு செல்கிறது.

‘புத்தரும் தம்மமும்’ கொணரும்போது பாபாசாகேப் பெரும் உழைப்பை நல்கிகொண்டிருந்தார். நாள்தோறும் வந்து ஆர்வம் மேலிட புத்தக வளர்ச்சியை பார்வையிடுவார். புத்தகம் எழுதியதால் வரும் பணம் எதையும் பெறாமல், மீண்டும் புத்தகங்களையே வாங்கிக்கொண்டு போய்விடுவார். வாங்கும் புத்தகங்களைப் படிக்க எப்படி முடிகிறது எனக்கேட்டபோது அவர் விளக்கம் அளித்தார். சில புத்தகங்கள்தான் ஆழமாக படிப்பதற்கு உகந்தவை. சிலவற்றில் நமக்கு தேவையானதை மட்டும் படித்துக்கொண்டால் போதும். படிப்பதில் ‘Discerment and Discrimination’ பழக்கம் வேண்டுமென்பதை அவர் கற்றுக்கொடுத்தார்.

தெலால் என்கிற புகழ்வாய்ந்த கல்வியாளர் மறைவிற்குப்பின்னர் அவரது நூலகத்தின் அரிய புத்தகங்களை யாரிடம் கொடுப்பது என்கிற கேள்வி வந்தபோது, அக்குடும்பத்தாரிடம் அம்பேத்கர் பெயர் நினைவூட்டப்பட்டது. அம்பேத்கரிடம் விலைக்கு எடுத்துக்கொள்ளமுடியுமா எனக்கேட்டனர். என்ன விலை என்றார் அம்பேத்கர். அவர்கள் சொன்ன விலையைக்கேட்டு நான் என்ன மில்லியனரா, என்று சொல்லி அவர் ஒருவிலை நிர்ணயித்தார். ட்ரக் லோடு நிறைய புத்தகங்களை சித்தார்த் கல்லூரிக்கு வாங்கி அனுப்பினார் பாபாசாகேப்.

வின்சென்ட் ஷீன் அமெரிக்க பத்திரிகையாளர். காந்திஜி, நேரு குறித்து புத்தகங்கள் எழுதியவர். அவர் 1950ல் புத்தமதம் குறித்து கூடுதலாக அறிய அம்பேத்கருடன் உரையாட வந்தார். ஷீனின் இந்திய காதல் குறித்து அம்பேத்கர் அவரிடம் கேலி பேசுவார். எங்கள் பிராம்மண அரசாங்கம் பற்றி புகழ்ந்து பேசும் நீங்கள், அவர்களை அமெரிக்காவிற்கு அழைத்து போய் பாருங்களேன் என்றார். ஷீன் எங்கள் நாட்டிலும் பிராம்மணர்கள் போல் உள்ளவர் இருக்கின்றனர் என பதிலை தந்தார். அதேபோல் காந்திஜி பற்றி உரையாடும்போதும், அவரின் பெருமையைக்கொண்டாடும் நீங்கள் அவரை அமெரிக்காவிற்கு அழைத்துப்போய் பராமரித்திருக்கலாம் என நகைச்சுவையாக சொல்வார். அம்பேத்கர் மறைந்தபோது , இவ்வளவு அறிவுத்திறன், கூர்மைகொண்ட இந்தியர் இனி யார் என ஷீன் எழுதினார்.

பேராசிரியர் ஷெலிகர் பம்பாயில் வழக்கறிஞராக இருந்தவர். அவர் ஒரு

நிகழ்வை விவரிக்கிறார். மாதுங்கா பள்ளிக்கூடம் ஒன்றிற்கு பாபாசாகேப் வர இசைவு தெரிவித்திருந்தார். கோட் சூட்டுடன் அவர் வருவார் என பொறுப்பாளர்கள் காத்திருந்தனர். அவர் லுங்கி, மேல் பைஜாமா சட்டையுடன் வந்தார். அங்கிருந்த தாழ்த்தப்பட்ட மாணவர்களில் நிலைமைகள் குறித்து கேட்டறிந்தார். இந்த குழந்தைகளை பிச்சைக்காரர்கள் போல் நடத்தக்கூடாது. தன்மானமிக்க இந்தியர்களாக வளர்க்கவேண்டும். அதற்குரிய சூழல்தான் பள்ளிகளில் நிலவவேண்டும் என்றார்.

தான் மிகப்பெரிய பொறுப்பில் இருப்பவர் என்கிற எண்ணம் ஏதுமின்றி பல நேரங்களில் கைநிறைய புத்தகங்களை அடுக்கிக்கொண்டு டிராம் வண்டியிலிருந்து அவர் இறங்கிப்போவதை பலர் பார்த்திருக்கக்கூடும் என ஷெலிகர் பதிவு செல்கிறது.

ஜோகிந்தர் நாத் மண்டல் ‘செட்யூல்ட் பெடெரேஷனில்’ பாபாசாகேப் உடன் செயல்பட்டவர். பாகிஸ்தானில் சட்ட அமைச்சராக இருந்தவர். அவர் பாபாசாகேப் குறித்த சில அனுபவங்களை சொல்லியிருக்கிறார். அரசியல் அசெம்பிளிக்கு நுழைந்திட அய்ரோப்பிய உறுப்பினர்களின் உதவி கேட்டு கல்கத்தா வந்த அம்பேத்கருக்கு ஏமாற்றம் மிஞ்சியது. சோர்வுற்ற பாபசாகேப் தன் முயற்சியை கைவிடப்போவதாக அறிவித்தார். காங்கிரசின் எதிர்ப்பையும் மீறி நாங்கள் அவரை தேர்ந்தெடுக்க வைக்க அனைத்து முயற்சிகளையும் மேற்கொண்டோம் என்பது அதில் முக்கிய பதிவு.

மீனாம்பாள் சிவராஜ் அம்பேத்கர் இயக்க முக்கிய பெண் தலைவர். SCF பெண்களின் முதல் மாநாட்டை தலைமைதாங்கி நடத்தியவர். அம்பேத்கரின் சகோதரி என பொதுவாக கருதப்படுபவர். அவரின் பதிவை பார்க்கலாம்.

சென்னை ராயப்பேட்டையில் மாநாடு 1944ல் நடந்தது. தன் கணவர் சிவராஜ் அமெரிக்கா செல்லவேண்டும். இரண்டாம் உலகப்போர் சமயம் என்பதால் எதுவேண்டுமானாலும் நடக்கலாம். எந்த உத்தரவாதமும் தரமுடியாது அனுப்பட்டுமா என அம்பேத்கர் மிக பொறுப்புடனும் கவலையுடனும் கேட்டார். தாங்கள் நல்ல காரியத்திற்காகவே அனுப்புகிறீர்கள் என்கிற பதிலை மீனா தந்தார்கள். உங்கள் தைரியத்தை மெச்சுகிறேன் என்றார் அம்பேத்கர்.

டி ஜி ஜாதவ் 1935ல் அம்பேத்கருடன் இணைந்து பம்பாய் அசெம்பிளிக்கு சென்றவர். தேர்தலில் வென்றதாலேயே லட்சியத்தை அடைந்ததாக கருதக்கூடாது என்றார் அம்பேத்கர். ஜாதவை சட்டம் படிக்க சொன்னார். யாரிடமும் கைநீட்டாமல் வாழவேண்டும் என்றார். நமது வருவாயில் 10 சதம் அளவிற்காவது புத்தகங்களுக்கு செலவிடவேண்டுமென்றார். லண்டன் செல்லநேர்ந்தபோது 1946 அக்டோபரில் ஜாதவிற்கு கடிதம் எழுதினார் அம்பேத்கர். இந்தியாவில் பாராளுமன்ற உறுப்பினர்களின் உணர்வுநிலை போதாமை, அறியாமை பெரிதாக இருக்கிறது. அவர்கள் தெளிவின்றி இருக்கிறார்கள். காபினட் மிஷன் செட்யூல்ட் இனத்தவர் பற்றிய குறிப்புகளை அச்சிடுவது மிகக்கடினமாக இருக்கிறது. செலவும் அதிகமாவதால் அங்கு அனுப்புகிறேன். லண்டனில் சில நாடாளுமன்ற உறுப்பினர்களை சந்திக்கவுள்ளேன் என அம்பேத்கர் தகவல் தருகிறார். உள்ளூர் நெருக்கடிகளுக்குள் சிக்காமல் தனது எழுத்துக்கள் காலத்தில் வெளியாகவேண்டும் என்கிற அவரது தவிப்பை நாம் உணரமுடியும்.

ஜின்னா அவர்கள் ஜோகேந்திரநாத்தை இணைத்துக்கொண்டது தந்திரமானது என்றாலும் நாம் ஆதரிக்கவேண்டும் என்றார் அம்பேத்கர். நாம் காங்கிரஸ், லீக் இருவரையும் எதிர்க்கவேண்டிய நிலையிலேயே இருக்கிறோம். காந்திக்கு அதிர்ச்சியைத் தரவேண்டும். அவரது அணுகுமுறையில் எந்த மாற்றமும் தென்படவில்லை எனவும் அம்பேத்கர் குறிப்பிட்டிருந்தார்.

கர்த்தார் சிங் போலோனியஸ் சிவில் சர்வீஸ் அதிகாரியாக உயர் பதவி வகித்தவர். அவர் சில முக்கிய தகவல்களை தருகிறார். அம்பேத்கர் வைஸ்ராய் கவுன்சில் உறுப்பினராக மிக உயர்ந்த பொறுப்பில் இருந்தபோது அலுவலகத்திலிருந்து வீடு திரும்பிக்கொண்டிருந்தார். தெருவில் வயதான ஒருவர் கிழிந்த ஆடையுடன் நடுங்கிக்கொண்டிருந்ததைப் பார்த்து அவரை வீட்டிற்கு அழைத்துச் சென்று அம்பேத்கர் உபசரித்தார். அவர் சிகிட்சைக்கு ஏற்பாடு செய்தார்.

அவர் தங்கியிருந்த பங்களாவிற்கு தினமும் பல கடைநிலை ஊழியர்கள், எளியநிலையில் இருப்பவர்கள் வந்து செல்வர். அவர்களின் குறைகேட்டு சரி

செய்ய முயற்சி மேற்கொள்வார் அம்பேத்கர். வீட்டின் பெயர் House of Justice என்பதற்கேற்ப அங்கு நியாயம் பிறக்கும் என பலர் வந்ததை போலோனியஸ் சொல்கிறார். அவர் அவ்வீட்டை காலி செய்யநேர்ந்தபோது அங்கு பணியாற்றியவர் அனைவருக்கும் மாற்று இடங்களில் பணிகிடைத்ததா என உறுதி செய்வதில் கவனம் எடுத்துக்கொண்ட செய்தியையும் போலோனியஸ் குறிப்பிடுகிறார்.

அம்பேத்கரிடம் இருந்த புத்தகங்களின் எண்ணிக்கை அளவிற்கு வேறு எந்த தனிநபரும் பெற்று இருக்கமுடியாது . மூன்று புத்தகங்கள் Life of Tolstoy, LesMiserables by Hugo, Far from the madding crowd by Hardy ஆகியன தன்னை அழவைத்துவிட்டன என அம்பேத்கர் குறிப்பிட்டதாக போலோனியஸ் தகவல் தருகிறார். விடியற்காலையா, நள்ளிரவா என்பதெல்லாம் பொருட்படுத்தாமல் எந்த நேரமும் படிக்க உகந்த நேரங்களாக அவர் வைத்துக்கொண்டார். நல்ல பேச்சு அல்லது எழுத்து என்பது குண்டுவீச்சு போல் அமையவேண்டும் என்பார் அம்பேத்கர்.

அம்பேத்கர் தனது நாயுடன் மிகவும் பிரியமாக நடந்துகொள்வார். நல்ல உடைகளை விரும்புவார். கண்ணுக்கு நேர்த்தி தரும் படங்களை பார்வையிடும்போது மகிழ்வார். அவரது படங்களின் தேர்வுகள் அவரது அழகியல் உணர்வுகளை நமக்கு வெளிப்படுத்தும் என்கிறார் போலோனியஸ். உடையில் தேசியம் தெரியவேண்டாமா என்ற விவாதம் வந்தபோது நமது மூதாதையர் அணிந்த ஒன்றா எனக்கேட்டு ஆதாம் ஏவாள் ஏதும் அணியவில்லையே என கேலியாக பதில் தந்தார் அம்பேத்கர். அதேபோல் அடிக்கடி நிலையில்லாமல் கட்சி மாறுபவர்கள் மீது கடும் விமர்சனம் அவரிடம் இருக்கும். நமது எதிரிகளுடன் மோத நமக்கு பலம் இருக்கிறது. ஆனால் துரோகிகளை என்ன செய்வது என்பார்.

சோகன்லால் சாஸ்திரி அம்பேத்கருடன் 25 ஆண்டுகள் தொடர்பில் இருந்தவர். அவர் அம்பேத்கர் பற்றிய சில நினைவுகளை பகிர்ந்து கொள்கிறார். மகர் பகுதியிலிருந்து வந்த முதல் பாரிஸ்டர் அம்பேத்கருக்கு பம்பாயில் சட்டத்தொழிலில் ஈடுபடுவது கொடுங்கனவாக இருந்தது. நீதிமன்றம் பிராம்மணர், பனியாக்களால் நிரம்பிவழிந்த காலமது. எந்த

சொலிசிட்டரும் அவரை ஜூனியராக ஏற்க தயங்கிய காலமும் கூட.

அம்பேத்கர் வர்த்தக கல்லூரி ஒன்றில் ரூ 150 சம்பளத்திற்கு ஆசிரியப்பணியை மேற்கொண்டார். பல எதிர்ப்புகளை கடந்தே அதுவும் கிடைக்கப்பெற்றது. துணைவியார் ரமாபாய் அவர்களிடம் ரூ 50யை குடும்ப செலவிற்கு தருவார். அவர் பொறுப்புடன் 1 1/2 ரூபாய் முடிச்சுகளாக 30 போட்டுக்கொண்டு அன்றாட செலவை அதற்குள் செய்துகொள்வார். ரூ 5 எதிர்பாராத செலவிற்கு என ஒதுக்கி வைப்பார். எவ்வளவு நெருக்கடி எனினும் இன்று பட்ஜெட் முடிந்தது என அடுத்த முடிச்சை எடுத்துவிடாமல் குடும்பம் நடத்தினார். பாரிஸ்டர் துணைவியார் என்ற எண்ணமின்றி சாணி வராட்டிகளை கூடைநிறைய சுமந்துவருவார். அக்கம்பக்கத்து கேலிகளை அவர் பொருட்படுத்தவேமாட்டார் என சாஸ்திரி பதிவு சொல்கிறது.

அம்பேத்கர் மகாராஷ்டிர பற்றுக்கொண்டவர். ஞானேஸ்வரின் கீதையைப்பற்றிப் பேசுவார். துளசிதாசரைவிட அவர் சிறந்தவர் என்பார். திலகர் போல் துன்பப்பட்ட அரசியல் தலைவர் எவரும் இல்லை. அவரின் சிறைக்கொடுமைப் பற்றி எங்களிடம் எடுத்து சொல்வார். காங்கிரசில் கோவிந்த் வல்லப் பந்த் பெரும் அறிஞர் என்பது அம்பேத்கரின் மதிப்பீடு என சாஸ்திரி குறிப்பிடுகிறார்.

சட்ட அமைச்சராக அவர் இருந்தபோது பெரும் அரசு கொண்டாட்டங்களில் அவர் பங்கேற்று நேரம் ஏன் வீணடிக்கவேண்டும் என நினைப்பார். ஒயின் கூத்துகள் என்று விமர்சிப்பார். புகைகூட பிடிக்க அவர் விரும்பமாட்டார். ஒருமுறை பான் கொடுத்தபோது மென்றுவிட்டு உடன் துப்பிவிட்டார். அவர் எளிய உணவுவகைகளையே விரும்பினார். மூன்று மீன் துண்டுகள், கொஞ்சம் சாதம்- சப்பாத்தி தயிர் போதும் என்பார்.

எம் ஓ மதாய் நேருவிற்கு தனி உதவியாளராக இருந்தவர். அம்பேத்கர் மட்டும் தனது கசப்புகளை சற்று குறைத்துக்கொண்டு பணியாற்றினால் பெரும் தலைவர் அவர்தான் என மதாய் கருதி அதை அம்பேத்கர் நண்பரிடம் சொல்லியிருந்தார். மதாய் சொன்னதை அறிந்த அம்பேத்கர் மாலை தேநீர் உரையாடலுக்கு அவரை அழைத்தார். மதாய் வந்தவுடன் நேரிடையாக சுற்றி வளைக்காமல் அப்போ என்னிடம் குறை இருக்கு என்கிறீர்கள் என

வினவினார். அவற்றை ஏற்கிறேன் எனவும் தெரிவித்தார்.

நமது அரசியல் அமைப்பு சட்டம் பேப்பரில் தீண்டாமையை ஒழித்திருக்கும், நடைமுறையில் அது இருக்கும் என அம்பேத்கர் விளக்கி சொன்னார். நூறாண்டுகளுக்கு அந்த வைரஸ் நீடிக்கலாம் என அக்கொடுமை குறித்த மதிப்பீட்டை முன்வைத்தார். அமெரிக்காவில் நீக்ரோ முன்னேற்றம் எவ்வளவு மெதுவாக நகர்கிறது என்பது பற்றிப்பேசினார்.

இந்துக்களுக்கு வேதம் தேவை என்றபோது வியாசர் தேவைப்பட்டது. காவியம் தேவைப்பட்டபோது வால்மீகி, இப்போது அரசியல் சட்டம் தேவை என்கிறபோது அம்பேத்கர் என ஒருசேர தனது கோபம்- வருத்தத்தை மதாயிடம் பதிவுசெய்தார். மலையாளிகளான நீங்கள் இந்த நாட்டிற்கு சங்கரரை பிறப்பித்து பெரும் தீங்கு விளைவித்துவிட்டீர்கள். அவர் பாதயாத்திரை செய்து தர்க்கம் மூலம் 'புத்தமதத்தை' விரட்டிவிட்டார் என்றார் அம்பேத்கர். இந்தியா பிறப்பித்த உன்னத ஆன்மா புத்தர்தான் என்றார். அடுத்து நாம் காந்தியை சொல்லக்கூடாது விவேகானந்தரை குறிப்பிடலாம் என்றார். காந்திதான் நேருவிடம் தங்களை அமைச்சரைவையில் சேர்த்துக்கொள்ளவேண்டும் என்றார் என மதாய் தெரிவித்தார். அது எனக்கு செய்திதான் என்றார் அம்பேத்கர்.

நாம்தியோ நிம்கடே பெரும் அறிஞர். விவசாய வல்லுனர். அம்பேத்கருக்கு பின்னர் அமெரிக்காவில் டாக்டர் பட்டம் பெற்றவர். அவர் சிறுவராக இருந்தபோது நெகிழ்ந்த காட்சி ஒன்றை சொல்கிறார். அம்பேத்கர் நாக்பூர் ஓட்டல் அறையிலிருந்து வெளிவந்தபோது ஏழைப்பெண்கள் சிலர் அவருக்கு மாலை அணிவித்து தங்கள் துயரங்களை ஏழ்மையை தெரிவித்தனர். மாலைக்கு எப்படி ஏற்பாடு செய்தனர் என அம்பேத்கர் அறியவிரும்பினார். காட்டு சுள்ளிகளை சற்று அதிகம் பொறுக்கி விற்று மாலை வாங்கி அப்பெண்கள் வந்ததை அறிந்து மனம் அவர் கலங்கினார். சிறு வயதிலேயே தன் தாயாரை இழந்த அவர் அப்பெண்களிடம் என் அம்மா இருந்திருந்தால் இப்படித்தான் அன்பு காட்டியிருந்திருக்கமுடியும் என்றார். உங்கள் குழந்தைகள் முன்னேற என்னால் முடிந்தவற்றை செய்வேன் என அப்பெண்களிடம் உறுதி கூறினார். எனக்கு எத்தனையோ

வாசனைப்பூக்களின் மாலைகள் சூடப்பட்டிருக்கலாம். ஆனால் நீங்கள் சூட்டியது எனது இதயத்தை தொட்டு நிற்கின்றன என்றார்.

மற்ற அமைச்சர்கள் பங்களாக்கள் போல்தான் வெளிப்பார்வைக்கு அம்பேத்கர் பங்களாவும் தெரியும். ஆனால் உள்ளே செல்பவர்கள் பெரும்பாலும் சமூக ஒடுக்குமுறைகளுக்கு உள்ளான மிகச் சாதாரண மக்களாகவே இருந்தனர் என நிம்கடே சொல்கிறார். ஒருமுறை அவரது நூலகம் பற்றிய உரையாடல் நிம்கடேவுடன் நடந்தது. உலகின் உன்னத நூலகம் என சொல்லலாம் அல்லவா எனக்கேட்டபோது அது எனக்கு தெரியாது என அடக்கமாக அம்பேத்கர் பதில் தந்தார். ஏறக்குறைய 30000 புத்தகங்கள் அவரது நூலகத்தில் இருந்திருக்கும். எனக்கு ரிலாக்சேசன் என்பதே ஒரு புத்தகத்தை மூடிவைத்துவிட்டு மற்றொரு புத்தகத்தை படிப்பதுதான் என்பார் அம்பேத்கர். அவருடன் எந்த பொருள் குறித்தும் உரையாடமுடியும். அதற்குரிய விஷய ஞானத்துடன் இருப்பார் என்கிறார் நிம்காடே..

பிரிட்டிஷார் ஒருமுறை தங்கள் கமிஷன் சார்ந்த அறிக்கை ஒன்றை தவறவிட்டு எங்கும் கண்டுபிடிக்கமுடியாமல் போனபோது அம்பேத்கரை கேளுங்கள் அவரால் உதவமுடியும் என தெரிவிக்கப்பட்டது. அந்த அறிக்கையை தன் நூலகத்திலிருந்து பயன்படுத்திவிட்டு உடன் ஒப்படைக்கவேண்டும் என்ற நிபந்தனையுடன் அவர் அதை நல்கினார். அதேபோல் அம்பேத்கருக்கு ஒரு அறிக்கை உடனடியாக ‘ரெபரன்ஸ்க்கு’ தேவைப்பட்டது. அவரது நூலகத்தில் இல்லை. அமெரிக்க கொலம்பியா மாணவரை அழைத்து தேட சொன்னார். அங்கு எப்பகுதியில் என்ன ‘கேட்டலாக்’ தலைப்பில் இருக்கும் என சரியான இடம் சுட்டி, புத்தக அளவு கலர் உட்பட தெரிவித்து கண்டுபிடிக்க வைத்தார். புத்தகம் குறித்த பெரும் விழிப்புணர்வு மற்றும் தேடல் மிகுந்தவராக இருந்தார் அம்பேத்கர்.

அம்பேத்கர் அமைச்சராக இருந்தபோது அவருக்கு கொடுக்கப்படும் உபசரிப்பு அலவன்ஸ் ரூ 500க்கும் புத்தகங்கள் வாங்க சொல்வார். அனைவருக்கும் குடிக்க தண்ணீர் உபசரிப்பாக இருக்கும். பாபாசாகிப் அவர்களிடம் எவரும் புத்தகங்களை கடனாக பெற்று செல்லமுடியாது.

நூலகத்தில் அமர்ந்து எவ்வளவு நேரம் வேண்டுமானாலும் செலவழிக்க அனுமதிப்பார். பிரஸ் கிளிப்பிங் கூட எவராலும் எடுத்துச் செல்ல முடியாது. ஆண்டுவாரியாக அவை தொகுக்கப்பட்டிருக்கும்.

அரசியல் சட்ட வரைவுக்காலத்தில் அவர் உறங்கினாரா என்பது கூட சந்தேகமே. இரவு முழுக்க படித்து குறிப்பு எடுத்துக்கொண்டு இருப்பார். அமெரிக்க பத்திரிகையாளர்கள் எப்போது நேரம் ஒதுக்கமுடியும் எனக்கேட்டனர். நேரு, காந்தியின் உதவியாளர்களை அணுகியபோது அவர்கள் ஓய்வில் என சொல்லி நேரம்பெற வாய்ப்பில்லாமல் செய்துவிட்டனர் என அவர்கள் அம்பேத்கரிடம் தெரிவித்தனர். அதற்கு 'அவர்கள் லக்கிதலைவர்கள்'என்றார் அம்பேத்கர். என் மக்கள் உறங்கிக்கொண்டிருக்கும்போது நான் விழித்துதானே இருக்கவேண்டும்- நீங்கள் எப்போது வேண்டுமானாலும் வாருங்கள் என்றார்.

நாம்தியோ பதிவில் அம்பேத்கர் கண்ணீர் மல்க தன் நினைவுகளை பகிர்ந்துகொண்ட காட்சி விவரிக்கப்படுகிறது. பொதுவாக வறுமை, வெளிநாடு போய் சட்டப்படிப்பு முடித்துவந்தும் சாதிக்கொடுமை காரணமாக வழக்குரைஞர் பணியில் சங்கடங்கள், குழந்தை இறந்தபோது அதை அடக்கம் செய்யும் அளவிற்கு கூட உடலில் தெம்பு இன்மை, துணைவியார் ரமாபாய் அவர்கள் உடல்நிலை பாதிக்கப்பட்ட நிலையில் மேற்கொண்ட பிரம்மசரிய வாழ்க்கை என பல தொடர் துயரங்களை அம்பேத்கர் பகிர்ந்துகொண்டார்.

1953ஆம் ஆண்டில் அம்பேத்கர் நோய்வாய்ப்பட்டிருந்தார். நிம்கடே பார்க்கச் சென்றபோது உடல் தகித்துக்கொண்டிருந்தது. பலவீனமாக காணப்பட்ட அவர் என்னால் கவனமாக பணியாற்ற முடியவில்லை என்றார். இனி நான் ஆலோசனை சொல்பவனாக மட்டும் மாறிவிடுவேனோ என கவலையை பகிர்ந்துகொண்டார். ஊதியம் மாதம் ரூ 240 வருகிறது. கடன் பொறுப்போ 22 லட்சம் அளவிற்கு இருக்கிறது. சித்தார்த் கல்லூரி, மிலிந்த் கல்லூரி, தேர்தல் செலவுகள் என பெரும் சுமை கூடிவிட்டது. அவ்வளவு சுமைகளுடன் இருந்தபோதும் அவர் தன்மானத்தை கைவிட்டதில்லை. எவரிடம் உதவி என போய் நின்றதில்லை. அவர் மகனுக்கு டெல்லி வீட்டுவாரியத்தில் வேலை என பேச்சுவந்தபோது, நான் அமைச்சர் என்பதால்

சலுகையா என கடும் கோபத்தை வெளிப்படுத்தினார்.

புத்தர் பற்றிப் பேசும்போதெல்லாம் பெருமிதம் பொங்க பேசுவார். அவர் பெரும் விஞ்ஞானி என்பார். கிடைத்த டேட்டாக்களைக்கொண்டு மட்டுமே முடிவிற்கு வருவார். உலகம் எப்போது தோன்றியது- இத்தனை நாட்களில் வளர்ந்தது என ஏதும் அவர் சொல்லவில்லை. ஆன்மா, கடவுள் என புத்தர் கவலைப்பட்டதில்லை. அறிவியலுக்கு எதிரானவர் புத்தர் என நிருபிக்க ஏதும் இல்லை என அம்பேத்கர் விளக்கி சொல்வார். பாராளுமன்ற உறுப்பினர் ஒருவர் கடவுள் உங்கள் ஆன்மாவை காக்கட்டும் என சொன்னதைக் கேட்டவுடன் இரண்டிலும் எனக்கு நம்பிக்கையில்லை என்பதை நீர் அறியவேண்டும் என்றார்.

இளைஞர்கள் திருமண அழைப்பிதழை அவரிடம் கொடுக்கவரும்போது, மணமாகி குழந்தை பெறுவதை ஏதோ ட்ராபி விளையாட்டுப் போல் நினைத்து நின்றுவிடக்கூடாது. பிறக்கும் குழந்தை கல்விமானாக வளர்க்கப்படவேண்டும் என அறிவுரை நல்குவார். தன் பெயரை வைப்பவர்களிடம் பெயரில் என்ன இருக்கிறது. லஷ்மி எனப் பெயர்வைத்து அவள் பாத்திரம் கழுவி பிழைக்கிறாள். சிவாஜி என பீடிக்கட்டுக்கு பெயரை வைக்கிறார்கள். சுபாஷ் போஸ் என பெயர் உள்ளவர் சலூன் வைத்துள்ளார். ஆகவே பெயரை பெரிதாக நினைக்கவேண்டாம். செயல்தான் முக்கியம் என்பார்.

புத்தமதத்திற்கு மாறும் நேரத்தில் தன்னால் இரு சரணங்களையே சொல்ல இயலும். புத்தம் சரணம் கச்சாமி, தம்மம் சரணம் கச்சாமி என்றார். மூன்றாவதான சங்கம் சரணம் கச்சாமி என்பதை தவிர்க்கவிரும்புகிறேன் என்றார். மகாபோதி அமைப்பின் செயலர் வலசிம்ஹா அனுப்பப்பட்டு அம்பேத்கருடன் உரையாடி அவரை சம்மதிக்க வைக்க வேண்டியதாயிற்று,

ஆகஸ்ட் 1956ல் ஒருமுறை அம்பேத்கரை சந்தித்தபோது அவர் சோகத்துடன் காணப்பட்டார். விவரம் கேட்டபோது புத்தகங்கள் வாங்கிக்கொண்டு திரும்பியபோது மழையின் காரணமாக கார் கோளாறுக்குள்ளாகி பெரும் பள்ளத்தில் சிக்கி ஏற்பட்ட சாலை விபத்து பற்றிக் கூறினார். இந்துவாக என் மரணம் நேர்ந்துவிடக்கூடாது என்பதே என்

கவலை. உடனடியாக புத்தமதம் மாறியாக வேண்டும் என்றார்.

நிம்கடே டிசம்பர் 6 அன்று அம்பேத்கர் புத்தகம் ஒன்றை வாங்கச் சென்றபோது கடைக்காரர் நீங்கள் கேட்ட புத்தகம் எழுதிய ஆசிரியர் இறந்துவிட்டார் என சொல்கிறார். பெரும் அழுகையுடன் சைக்கிளை எடுத்துக்கொண்டு அம்பேத்கர் இருப்பிடத்திற்கு தான் விரைந்ததாக நாம்தியோ சொல்கிறார். அம்பேத்கரின் உடல் சந்தனபேழையில் வைக்கப்பட்டு பம்பாய் எடுத்து செல்வதற்கான ஏற்பாடுகள் நடந்தன.

சங்கரானந்த் சாஸ்திரி பாபாசாகேப் அவர்களுடன் 20 ஆண்டுகளுக்கும் மேல் நெருக்கமாக பழகியவர். சிவில் சப்ளை துறையில் இருந்தவர். அம்பேத்கரின்Annihilation of Caste யை கொணர்ந்தவர். அம்பேத்கரின் நினைவுகள் என்ற புத்தகத்தை எழுதியவர். அவர் சில குறிப்புகளைத் தருகிறார்.

ஜி டி பிர்லாவின் சகோதரர் கிஷோர் பிர்லா அம்பேத்கர் இல்லத்திற்கு மார்ச் 31, 1950 அன்று வந்தார். முன்னதாக மதராசில் பெரியார் தலைமையில் நடந்த பிராம்மணர் அல்லாதவர் கூட்டம் ஒன்றில் கீதையை அம்பேத்கர் விமர்சித்திருந்தார். கீதையை விமர்சித்து இந்து மக்களின் மனதை ஏன் புண்படுத்துகிறீர்கள் என பிர்லா வினவினார். கீதையை விமர்சிப்பதை நிறுத்திவிட்டு இந்துமதத்தை வலுப்படுத்த அம்பேத்கர் உதவ வேண்டும். தாழ்த்தப்பட்டோர் முன்னேற்றத்திற்கு 10 லட்சம்வரை நிதி உதவி செய்யத்தயார் என்றார் கிஷோர் பிர்லா.

நான் என்னை விற்றுக்கொள்ளமுடியாது. கீதை சமூகத்தை பிளவுபடுத்தி பேசுவதால் விமர்சிக்கவேண்டியுளளது, அது வெறுப்பு பிரதியாகவுள்ளதால் விமர்சிப்பதாக பதிலை தந்தார் அம்பேத்கர். அதேபோல் ராமர் கோயில் புத்தர்கோயில் கட்டியதையெல்லாம் பிர்லா பேசினார். தங்கள் தயாள சிந்தனைக்கு நன்றி என்றார் அம்பேத்கர். செட்யூல்ட் வகுப்பார் முன்னேற்றத்திற்கு தாங்கள் ஆற்றி வரும் பணிக்காகவும், அரசியல் அமைப்பு சட்ட பணிக்காகவும் என் நன்றியை தெரிவிக்கிறேன் என சொல்லி பிர்லா விடைபெற்றார்.

தேவி தயாள் அம்பேத்கரின் நூலகத்தை பராமரித்தவர். அன்றாட நடவடிக்கைகள் குறித்த டைரி குறிப்புகளை அவர் வைத்திருந்தார். அம்பேத்கர் இரவு வெகுநேரம் கண்விழித்து படித்துவிட்டு புத்தகங்கள் சூழவே உறங்கிவிடுவார். காலை தினசரிகள் சகிதம் அவரை எழுப்புவோம். சில இரவுகளில் 1 மணி, 2 மணிக்குக் கூட தேவைப்படும் புத்தகம், குறிப்புகளை சொல்லி எடுத்துவா என்பார். 12 சதுர அடி படுக்கையறையில் பல ஸ்டூல்களில் புத்தகங்களாக வைத்திருப்பார். படுத்துக்கொண்டால் கூட புத்தகம் கையில் இருக்கும். மிகவும் லயித்து படிக்க ஆரம்பித்தால் கழிப்பறை செல்லும்போது கூட அவர் கையுடன் எடுத்து செல்வதை பார்க்கமுடியும். மறந்து அங்கே வைத்துவிட்டு வந்ததை நாங்கள் திரும்ப எடுத்து வருவோம். குளித்துவிட்டு காலை உணவிற்கு வரும்போதும் ஏதாவது ஒன்று கையில் எடுத்து வருவார்.

திருவிதாங்கூர் திவான் சர் சி பி ராமசாமி அவரை பார்க்க வந்தார். அவர் வருகிறார் என செய்தி வந்தவுடன், திவான் சில ஆண்டுகளுக்கு முன்னர் பேசிய கோயில் நுழைவு உரிமை குறித்த பேப்பர் கட்டிங் ஒன்றை அம்பேத்கர் தேட சொன்னார். நினைவுப்படுத்திக்கொண்டு 12 ஆண்டுகளுக்கு முன்னரான செய்தி அது என்றார். 3 அங்குலம் கூட இல்லாத அந்த துண்டு செய்தியைக்கூட பத்திரப்படுத்தி வைத்திருந்த பொறுப்பு வியப்புக்குரிய ஒன்று,

திடிரென தானே இன்று சமையல் செய்யப்போகிறேன் என்பார். அப்படி ஒருநாள் செப்டம்பர் 1944ல் 7 வகை பதார்த்தங்களை செய்து வைத்தார். அன்று மீனாம்பாள் சிவராஜ் வந்தார். அவருக்கு உணவை பரிமாறி அம்பேத்கர் மகிழ்ந்தார். சமையல் வேலையில் இருந்தபோது உயர் அதிகாரிகள் அவரிடம் உத்தரவு கேட்டு வந்தனர். அவர் வைஸ்ராய் கவுன்சிலில் தொழிற்துறையை பெற்றிருந்த சமயம். அப்படி உயர் பொறுப்பில் இருந்தபோதும் தனக்கு சமையல் செய்து தந்ததை பெருமிதமாக மீனாம்பாள் நன்றி பாராட்டி சொன்னார்.

பொதுவாக பொழுதுபோக்கு என்பதில் நாட்டமில்லாதவராக பாபசாகேப் இருந்தார். விருந்துகளை- கேளிக்கைகளை நேர விரயம் என

தவிர்த்துவிடுவார். நண்பர்கள் மிகவும் வலியுறுத்தினால் உணவிற்காக எப்போதாவது செல்வார். பொதுவாக யாராவது உபசரிப்பு என பேசினால் வீட்டிலேயே வாங்கிவந்து உபசரித்துவிடுங்கள்- வெளியே நேரம் வீணடிக்கமுடியாது என சொல்லிவிடுவார். விடுப்பு எடுத்துக்கொண்டு ஊர் செல்வது, சினிமா பார்ப்பது என்பதெல்லாம் அவரிடம் இல்லாத பழக்கம்.

தன்னை எவராவது தனிப்பெரும் மேதை எனப் புகழ்ந்தால் உடனே அதை அங்கீகரிக்காமல் பதில் சொல்லி புரிய வைப்பார். கடுமையான, தொடர் உழைப்பு இருந்தால் சாதிக்க இயலும் என்பார். Intellectual singularity என்பதை தான் ஏற்பதில்லை என்பார். மனித சக்திக்கு அப்பாற்பட்டது என நினைப்பது மாயை- ‘சூப்பர் மானுடன்’ என்பதில் நம்பிக்கை இல்லை என தெளிவுபடுத்தி விடுவார்.

அம்பேத்கரிடம் 45000 புத்தகங்கள் இருந்திருக்கலாம் என தேவிதயாள் குறிப்பிட்டுள்ளார். தான் சம்பாதித்த அனைத்தையும் புத்தகத்திற்காக செலவிட்டுவிட்டேன் என அம்பேத்கர் அடிக்கடி கூறுவார். புத்தகங்களை எப்படி வைப்பாரோ, அது அப்படியே இடம் மாறாமல், கலைக்கப்படாமல் இருக்க வேண்டும் என விரும்புவார். மாறியிருந்தால் அவர் கோபத்திற்கு இலக்காக நேரிடும். கடுமையான உடல்வலி என சொல்வார். ஓய்வு எடுக்கக்கூடாதா எனக்கேட்டால் புத்தகம் படிக்கத் தொடங்கிவிட்டால் வலி தெரியாது, படிப்பதே வலிநிவாரணி என்பார்.

நானக் சந்த் ரட்டு அம்பேத்கருக்கு செயலர் போல பணியாற்றியவர். அவரின் நினைவுகளை தொகுத்துக்கொடுத்தவர். அம்பேத்கரின் இல்லத்திற்கு அவர் தினமும் 25 கிமீ சைக்கிளில் வந்து வேண்டிய உதவிகளை செய்து திரும்புவார். சில நாட்களில் தனியாக அமைதியாக அமர்ந்து அம்பேத்கர் வயலின் வாசித்துக்கொண்டிருப்பார் என்பதை ரட்டு சொல்கிறார். தனது சுயசரிதை, மகாத்மா பூலே வரலாறு, இந்திய ராணுவ வரலாறு ஆகியவற்றை எழுதவேண்டும் என அம்பேத்கர் நினைத்திருந்தார் என ரட்டு குறிப்பிடுகிறார். ‘வைட்டிங் பார் விசா’ என்கிற அம்பேத்கர் சுயசரிதை குறிப்புகள் பற்றியும் ரட்டே சொல்கிறார். அதையும் Attendant Details புத்தகத்தில் இணைத்துள்ளனர்.

# 3. ஆளுமைகளின் அம்பேத்கர்

இந்திய நாடாளுமன்றம் புகழ்வாய்ந்த நாடாளுமன்ற உறுப்பினர்களின் நினைவை போற்றும் வகையில் நூல்களை கொணர 1990ல்முடிவெடுத்தது. லோகியா, ஷியாமாபிரசாத், தேஷ்முக், அனந்தசயனம், கோவிந்தமேனன், புபேஷ் குப்தா, ராஜேந்திரபிரசாத், டாங்கே, ஏ கே கோபாலன், மதுதந்தவதே போன்றவர்கள் குறித்து வெளியீடுகள் வந்தன. 1991ல் அம்பேத்கரின் நூற்றாண்டை ஒட்டி அம்பேத்கரின் வாழ்க்கை பற்றிய சிறுகுறிப்புடன் அவரைப்பற்றி அறிந்த புகழ்வாய்ந்த ஆளுமைகள் சிலர் அம்பேத்கர் பற்றி பேசியிருந்தனர். ஆளுமைகளால் வர்ணிக்கப்பட்ட அம்பேத்கர் பற்றிய சுருக்கமான சொற்சித்திரம் இங்கு தரப்படுகிறது

திரு ரங்கா அவர்கள் விடுதலை போராட்டவீரர். இந்திய நாடாளுமன்றத்தில் பல ஆண்டுகள் உறுப்பினராக இருந்தவர். விவசாய இயக்கத்தை வழிநடத்தியவர். நாடாளுமன்ற சேவைக்காக புகழ்பெற்றவர். ரங்கா அவர்கள் அம்பேத்கர் குறித்து தரும் பதிவைக்காண்போம்.

முதல்வட்டமேஜை மாநாட்டில் அம்பேத்கரின் பங்கேற்பு அவரை தேசிய அரசியல் அரங்கிற்கு எடுத்துச் சென்றது. சுயராஜ்யத்தை அவர் எதிர்ப்பார் என நினைத்தவர்க்கு ஏமாற்றமே கிடைத்தது. முதல் சுதந்திரப்போருக்கு பின்னர் 1857ல் விக்டோரியா ஆட்சிப் பிரகடனம், பிரிட்டிஷ் ஆட்சி இந்தியாவில் நிலவி வந்த சமூக- மத விவகாரங்களில் பாராமுகம் காட்டியதை அம்பேத்கர் விமர்சன பார்வையுடனேயே முன்வைத்தார்.

இந்த உரைக்குப் பின்னர் அம்பேத்கரை லண்டனில் ரங்கா சில நண்பர்களுடன் சந்தித்து விவாதித்ததை சொல்கிறார். பாரபட்சமின்றி அடிப்படை உரிமைகள் பெறுவதற்கும், சமூக அரசியல் உரிமைகளை பெறுவதற்கும் சோசலிச அணுகுமுறையே சிறந்தது என்கிற ஏற்பு எங்களிடம் இருந்தது. அம்பேத்கருக்கு காந்தியின் தலையீடு குறித்த கவலை இருந்தது. காந்தி சனாதன தர்மம் எனப்பேசுவதை அம்பேத்கர் விமர்சித்தார். மகாத்மா காந்தி அடிப்படையில் சமூக புரட்சிக்காரர்தான். இந்து மதபுராணங்கள்,

நம்பிக்கைகள் சாதாரண மக்களின் முன்னேற்றத்திற்கு தடையாக இருக்கும் என காந்திஜி நினைத்தால் அவற்றை அவர் ஏற்கமாட்டார் என்கிற விளக்கத்தை அம்பேத்கரிடம் ரங்கா தெரிவிக்கிறார். அம்பேத்கர் ரங்காவின் விளக்கத்தை ஏற்கவில்லை. அம்பேத்கருடன் விவாதங்கள் தொடர்வதற்கு இவ்வேறுபாடுகள் தடையாக இல்லை என்பதை தான் உணர்ந்ததாக ரங்கா பதிவிடுகிறார்.

அதேபோல் காந்தியின் 'ஹரிஜன முன்னேற்ற' நடவடிக்கைகளை அம்பேத்கர் தாக்கிப்பேசியதையும் நியாயத்திற்குரிய ஒன்றாக ரங்கா ஏற்கவில்லை. புனா உடன்பாட்டு காலத்தில் அம்பேத்கர் எடுத்த நிலைப்பாடுகளை பல தேசத் தலைவர்கள் உவப்பான ஒன்றாக ஏற்கவில்லை. வேலூர் சிறையில் சக சிறைவாசிகளிடம் அம்பேத்கரை புரிந்துகொள்வோம் என ரங்கா பரிந்து நின்று பேசியதும் எடுபடவில்லை.

இரண்டாம் உலகப்போர் காலத்தில் வைஸ்ராய் கவுன்சிலுக்கு செல்வதில் அவர் காட்டிய நிர்பந்தம் - செட்யூல்ட் மக்களின் பிரதிநிதி என பகிரங்கமாக தைரியமாக வெளிப்படுத்தியது பாராட்டையும் பெற்றது. விடுதலை இந்தியாவில் அமைச்சரவையில் அம்பேத்கரும் இணைக்கப்படவேண்டும் என சொன்னவர்களில் ரங்காவும் ஒருவர். அதேபோல் அரசியல் நிர்ணயசபை 'டிராப்டிங் கமிட்டி' சேர்மன் என்பதிலும் அவருக்கு ஆதரவாக ரங்கா நின்றார்.

அம்பேத்கருக்கு இந்திய மிதாலஜி குறித்த ஆய்வில் மிக ஆர்வம் இருந்தது. புத்தமத பெரும்பான்மை மக்கள் மீதான பிராமண மத தாக்குதலாகவே அவர் இந்திய வரலாற்றை விவரிப்பார். கர்மா என காரணம் காட்டி திராவிட மக்களும், பழங்குடி மக்களும் கடும் சமூக வதைகளுக்கும், கீழான நிலைக்கும் தள்ளப்பட்டதை பொறுத்துக்கொள்ள முடியவில்லை என்பார். பெரியார், அம்பேத்கர் போன்ற சமூக சீர்திருத்த போராளிகள் இதன் பொருட்டே காந்தியிடம் பெரும் அதிருப்தி கொண்டவர்களாக இருந்தனர்.

வைஸ்ராய் கவுன்சில் உறுப்பினராக இருந்தபோதும் அம்பேத்கர் தன் ஆய்வுக்கான வேலைகளை- தீவிர வாசிப்பை கைவிடவில்லை. சூத்திரர்கள், தாழ்த்தப்பட்டவர்கள் குறித்த சிறந்த ஆய்வுகளை அவர்

நல்கினார். பிராம்மணியத்திற்கு மாற்றாக வேறு மாற்று கலாச்சார பெருமிதங்களை வெளிப்படுத்தினால் மட்டும் போதாது என்பதை அவர் அறிந்தவராக இருந்தார். தலித்களின் அரசியல் பொருளாதார உரிமைக்கு அவர் முன்னுரிமை தந்தார்.

கம்யூனிஸ்ட்கள் மத்தியில் இணங்கி செல்வதற்கான அடிப்படைகள் அம்பேத்கரிடம் இருந்தபோதும் அவர் தனது தொழிற்சங்கத்தை கம்யூனிஸ்ட்கள் வழியொற்றிய நடவடிக்கைகளாக அமைத்துக்கொள்ளவில்லை. மார்க்சியர்கள் பேசிய வன்முறை பாதை உகந்ததல்ல என அவர் கருதினார்.

முத்தாய்ப்பாக ரங்காவின் மொழியில் அம்பேத்கர் இப்படித்தான் பார்க்கப்பட்டார். “Dr. Ambedkar’s scholarly speeches in the Constituent Assembly show how erudite, independent and far-sighted his contributions were to the shaping of our Constitution. He was a true democrat. He lived as a humane pointer to the future social democracy of Indian Swaraj.”

முரளிதர் பண்டாரே ராஜ்யசபை உறுப்பினராக இருந்தவர். உச்சநீதிமன்றத்தில் நீதிபதியாகவும் செயல்பட்டவர். அவர் மராட்டிய மாநில மூத்த காங்கிரஸ்காரராகவும் அறியப்பட்டவர். அவர் அம்பேத்கரை எவ்வாறு வெளிப்படுத்துகிறார் எனப் பார்க்கலாம்.

தீண்டாமையை கடவுள் சகித்துக்கொள்கிறார் எனச்சொன்னால் அக்கடவுள் எனக்கு வேண்டாம் என குறிப்பிட்டவர்தான் திலகர். சுயராஜ்யம் எனது பிறப்புரிமை என்ற திலகர் தாழ்த்தப்பட்டவர்களுக்கு அடிப்படை உரிமைகள் இல்லையெனில் அது சுயராஜ்யமாக இருக்காது எனவும் குறிப்பிட்டார். அது புதிய அடிமைத்தனமாகவே அமையும் என்றார்.

அம்பேத்கருக்கு தலித் மக்களின் சமுக, அரசியல் பொருளாதார விடுதலை தலையாயதாக இருந்தது. அதற்கு அவர் வேர்முதல் வேலை செய்யவேண்டியிருந்தது. இதற்காக நாடு சுற்றினார். உலக அரங்குகளில் பிரச்சனையை எடுத்துச் சென்றார். சைமன் சாட்சியம், வட்டமேஜை மாநாடுகளில் உரைகள், அரசியல் நிர்ணய சபையில் பங்களிப்பு என அவர்

நடவடிக்கைகள் வரலாற்று பாத்திரங்களாகியுள்ளன.

தாழ்த்தப்பட்டவர்களுக்கு சமன்மை வாய்ப்பைப்பெற முதலில் அரசியல் உரிமை வேண்டும் என அம்பேத்கர் உழைத்தார். அவர்களுக்கு அதிகாரத்தில் குரல் இருக்கச் செய்தார். இந்த அதிகாரம் மூலம் அவர்களின் அனைத்து பின்னடைவுகளையும் ஓரளவிற்காவது சரி செய்து கல்வி, வேலைவாய்ப்புகளில் முன்னேற்றம் கொணரமுடியும் எனக் கருதினார்.

1919 மிண்டோ மார்லி சட்டம்தான் அதிகாரபூர்வமாக ஒடுக்கப்பட்ட மக்கள் பற்றி குறிப்பிட்டது. மத்திய அசெம்பிளிக்கு நியமிக்கப்பட்ட 14ல் ஒருவர் ஒடுக்கப்பட்ட பிரதிநிதி என்றது. அதேபோல் மாநில பிரதிநிதிகள் 4 என கொடுத்தது.

1928ல் வந்த சைமன் கமிஷனிடம் அம்பேத்கர் செட்யூல்ட் சாதியினரின் ஒதுக்கீட்டை- இணைந்த வாக்களார் முறையுடன் கோரினார். இஸ்லாமியரின் தனி வாக்காளர் தொகுதியை எதிர்க்கவும் செய்தார். பின்னர் அம்பேத்கரும் தனி வாக்காளர் தொகுதி என மாற்றிக்கொண்டதும் ராம்சே அவார்ட் கொடுக்கப்பட்டு காந்தி உண்ணாவிரதம், புனா உடன்பாடு போன்ற நிகழ்வுகள் உருவாயின.

சைமன் கமிஷன் 1930ல் தனது அறிக்கையில் முஸ்லீம்களுக்கு தனி வாக்காளர் தொகுதி எனச் சொல்வது ‘பொது குடிமகன்’ எனும் கருத்துரு உருவாக தடையாக இருக்கும் என்று தெரிவித்தது. ஆனாலும் இருப்பதை தொடரவே பரிந்துரைத்தது. நேரு அறிக்கையையும் அது புறக்கணித்தது. சைமன் கமிஷன் கூட்டு வாக்காளர் முறையில் Depressed Class எனும் ஒடுக்கப்பட்ட பிரிவினர்க்கு இட ஒதுக்கீடு செய்யலாம் என்றது. ஆனால் வேட்பாளர் நிற்பதற்கு தகுதி சான்றிதழை கவர்னரிடம் பெறவேண்டும் என்கிற நிபந்தனை இருந்தது . அம்பேத்கர் ‘நாமினேஷன்’ என்பதை ஏற்பதற்கில்லை என தெரிவித்தார். எந்தவித நிபந்தனையுமில்லாமல் தேர்ந்தெடுக்கப்படவேண்டும் என்றார். மேலும் அவர் தனி வாக்காளர் தொகுதி எனவும் சொல்லத்துவங்கினார். சுயராஜ்யம் என்றால்தான் மக்களுக்கு உண்மையான அதிகாரம் கிடைக்கும். பட்டியல் சாதியினருக்கும் அதுதான் இலக்கு என அம்பேத்கர் குறிப்பிட்டார்.

சைமன் கமிஷனைத் தொடர்ந்து முதல் வட்டமேஜை மாநாடு 12-11-1930ல் கூட்டப்பட்டது. டிசம்பர் 1 வரை நடந்த இக்கூட்டத்தொடரில் காங்கிரஸ் பங்கேற்க மறுத்துவிட்டது. இரண்டாவது வட்டமேஜை மாநாட்டின் கூட்டத்தொடர் 7-9-31 முதல் 1-12-1931 வரை நடைபெற்றது. காங்கிரஸ் சார்பில் காந்தி பங்கேற்றார்.

முதல் வட்டமேஜையில் அம்பேத்கர் இந்தியாவில் உள்ள அனைத்து தாழ்த்தப்பட்டவர்களும் இன்றுள்ள அதிகார வர்க்க அரசாங்கத்தை மாற்றி மக்களால் மக்களுக்கான அரசாங்கத்தை உருவாக்கவே விரும்புகிறார்கள் . நீங்கள் விபத்தாக உருவாக்க நினைக்கும் அரசியல் சட்டத்தை மக்கள் எப்படி ஏற்பார்கள். பெரும்பான்மை மக்களின் விருப்பத்தை கொள்ளாத அரசியல் சட்டம் நிற்காது என்றே பேசியிருந்தார்.

ஒடுக்கப்பட்ட மக்களின் பிரச்னை சமுகரீதியானது எனச் சொல்வதை பார்க்கிறோம். ஆனால் அதன் தீர்வு அரசியலில் இருக்கிறது. எங்கள் கரங்களுக்கு அரசியல் அதிகாரம் கிடைக்கப்பெறாமல் எங்கள் பிரச்னை தீராது. எவராலும் அதை தீர்க்கவும் முடியாது என அம்பேத்கர் உரை அமைந்தது.

“We feel that nobody can remove our grievances as well as we can, and we cannot remove them unless we get political powers in our own hands.”

இரண்டாவது வட்டமேஜைக்கு முன்னர் அம்பேத்கர் காந்தியை சந்திக்கிறார். அம்பேத்கரும் ஒடுக்கப்பட்ட பிரிவிலிருந்து வந்தவர் என காந்தி அறிந்திருக்கவில்லை. பிராம்மணர் என்று கூட நினைத்திருந்தார். அம்பேத்கர் காந்தியிடத்தில் எனக்கு தாய்நாடு இல்லை என்கிறார். வட்டமேஜையில் தங்கள் கருத்துக்களைப் பார்த்தபோது சிறந்த தேசபக்தர் என்றே கருதமுடியும் என்றார் காந்தி . இல்லை எனக்கு சொந்த நாடு இல்லை என அழுத்தமாக மறுமொழி தருகிறார் அம்பேத்கர். நாங்கள் நாய்கள் பூனைகளைவிட கேவலமாக நடத்தப்படுகிறோம். எப்படி இந்த மதத்தை, நாட்டை சொந்தம் என கொண்டாடமுடியும். சுயமரியாதை கொண்ட எந்த ஒடுக்கப்பட்டவராலும் இந்த நாடு குறித்து பெருமிதம் கொள்ளமுடியாது என்ற பதிலே காந்திக்கு அம்பேத்கரிடமிருந்து கிடைத்தது.

எங்களுக்கு இழைக்கப்படும் அநீதி காரணமாக நாங்கள் விசுவாசிகள் இல்லாமல் ஆகியுள்ளோம். என்னை துரோகி என சொன்னாலும் அதற்கு வருத்தப்படமாட்டேன். நான் ஏதாவது தேச சேவை செய்கிறேன் என்றால் அது தேசபக்தி காரணமாக அல்ல. மாசற்ற மனசாட்சியால்தான் (it is due to my unsullied conscience and not due to any patriotic feelings in me.) எனவும் அம்பேத்கர் குறிப்பிட்டிருந்தார்.

காலம் காலமாக ஒடுக்கப்பட்டுவரும் என் மக்களுக்கு உரிமைகளை பெறுவதற்கு நான் செய்வது பாவமாகாது. என்னால் இந்த நாட்டிற்கு தீங்கு வராமல் இருப்பது என் மனசாட்சி காரணமாகத்தான் (any disservice to this country, it would not be a sin; and if any harm does not come to this country through my action, It may be due to my conscience.) என தன் வருத்தம் தோய்ந்த குரலை வெளிப்படுத்தினார் அம்பேத்கர்.

முஸ்லீம்களும், சீக்கியர்களும் தாழ்த்தப்பட்டவர்களைவிட மேலான நிலையில் இருந்தும் அவர்களுக்கு அரசியல் அங்கீகாரம் கிடைத்துள்ளது. காங்கிரசும் முஸ்லீம்கள் கோரிக்கையை ஏற்றுள்ளது. முதல் அமர்வு ஒடுக்கப்பட்டவர்களுக்கு அரசியல் பாதுகாப்பு, போதுமான பிரதிநிதித்துவம் கொடுத்துள்ளது. இதில் தங்கள் கருத்தென்ன என அம்பேத்கர் வினவினார். இந்துக்களிடமிருந்து அரசியல் பிரிப்பை உருவாக்குவதை ஏற்கமுடியாது. அதற்கு எதிராக இருக்கிறேன். அது தற்கொலைக்கு சமம் என்றார் காந்தி.

வட்டமேஜையில் இவ்வேறுபாடு எதிரொலித்தது. தனித்த வாக்காளர் தொகுதி தராத எந்த அரசியல் சட்டத்தையும் 'டிசி'க்கள் ஏற்கமாட்டார்கள். இடஒதுக்கீடு, கூட்டுவாக்காளர் என்றால் பெரும்பான்மை கருணையில்தான் ஒடுக்கப்பட்டவரின் பிரதிநிதி இருக்கமுடியும் என அம்பேத்கர் கருதினார். வாழ்வைப்போல் தீண்டப்படாதவர் முன்னேற்றமும் எனக்கு முக்கியமானது. எனவே தனி ஒருவனாக இருந்தால் கூட இதை தடுக்கவே முயற்சிப்பேன் என்றார் காந்தி.

கம்யூனல் அவார்ட் என அறியப்படும் வகுப்புவாரி பிரதிநிதித்துவத்தை பிரிட்டிஷ் பிரதமர் ராம்சே மக்டானல்ட் ஆகஸ்ட் 17 1932ல் அறிவித்தார். இதில் இட ஒதுக்கீடு தொகுதிகள், இரட்டை வாக்குரிமை சொல்லப்பட்டிருந்தது.

இந்த ஏற்பாடு 20 ஆண்டுகளுக்கு பின்னர் மறைந்துபோகும் என்றனர். முஸ்லீம்கள், சீக்கியர், அய்ரோப்பியர், கிறிஸ்துவர் என தனி வாக்காளர் முறை ஏற்படுத்துவதன் மூலம் நாடு பிரிவினையுள் போகும் (The Award completely balkanlsed India) என்ற கவலை இருந்தது என பந்த்ரே சொல்கிறார்.

காந்தி காலவரையற்ற பட்டினிப்போரை செப்டம்பர் 20 1932ல் துவக்கினார். முன்னதாக செப்டம்பர் 19 அன்று பம்பாயில் மதன்மோகன் மாளவியா தலைமையில் இந்து தலைவர்கள் கூடினர். அம்பேத்கர் பங்கேற்றார். காந்தியின் உண்ணாநோன்பு இரண்டு அம்சங்களை தீவிரமாக்கியது. காந்தியின் உயிர், தீண்டாமை இல்லாத சமூகம். அம்பேத்கர் மீது நாட்டின் முழு கவனமும் திரும்பியது. அவர் மகாத்மா உயிரைக் காப்பாரா?

தேஜ்பகதூர் செப்டம்பர் 21 அன்று கூறிய திட்டத்தில் 197யை (71 இடங்களுக்கு பதில்) அம்பேத்கர் கோருகிறார். இரட்டைநிலையில் தேர்வு என்பதும் பேசப்படுகிறது (evolved a scheme of primary and secondary elections). காந்தியை அம்பேத்கர் சிறையில் சந்திக்கிறார். உருவாகியிருக்கும் பொதுக்கருத்துக்கு அஞ்சாமல் தனது நிலையை உறுதியாக வைக்கவும் வேண்டும், காந்தியின் உயிரும் காக்கப்படவேண்டும் எனும் பெரிய பொறுப்பு அவர் தலையில் சுமத்தப்பட்டிருந்தது.

காந்தி பலவீனமாக இருந்தார். அம்பேத்கர் சொல்வதை செவிமடுத்தார். “You have my fullest sympathy. I am with you, Doctor, in most of the things you say. But you say you are interested in my life”. எங்கள் மக்களுக்காக மட்டும் நீங்கள் அர்ப்பணித்துக்கொண்டால் நீங்கள் எங்கள் நாயகர்தான் என அம்பேத்கர் மறுமொழி பகர்கிறார். காந்தி “Well, then, if it is so, then you know what you have got to do to save it. Do it and save my life” என்கிறார்.

” I know you do not want to forego what your people have been granted by the Award. I accept your panel system, but you should remove one anomaly from it. You should apply the panel system to all the seats. You are untouchable by birth and I am by adoption. We must be one and indivisible. I am prepared to give my life to avert the disruption of the Hindu community. ” என காந்தி தெரிவிக்கிறார்.

இந்த ஏற்பாடு எவ்வளவு காலம் 10 ஆண்டுகளா 5 ஆண்டுகளா என்பதில் சர்ச்சை இருந்தது. உடன்பாடு ஏற்படவில்லை. ராஜாஜி அதை எதிர்காலத்தில் இருபக்கமும் பேசி தீர்த்துக்கொள்ளலாம் என்றார். செப்டம்பர் 24 மாலை 5 மணிக்கு உடன்பாடு ஏற்பட்டு கையெழுத்திடுகின்றனர். அம்பேத்கர் 148 இடங்களை பெற்றார். பிரிட்டிஷ் அரசாங்கம் உடன்பாட்டை ஏற்றவுடன் செப்டம்பர் 26 1932ல் காந்தி உண்ணாநோன்பை முடித்துக்கொண்டார்.

அம்பேத்கர் தனது அனுபவத்தின் அடிப்படையில் மீண்டும் இப்பிரச்னையை மார்ச் 1947ல் ‘அரசாங்கமும் சிறுபான்மையினரும்’ என்கிற குறிப்பில் எழுப்பினார். ஆனால் நாட்டுப் பிரிவினையின் கசப்பான அனுபவங்களால் தனித்த வாக்காளர் முறை என்பது ஒழிக்கப்பட்டது. தனித்தொகுதி முறையை சட்டப்படி நீட்டிக்கும் வகையில் அம்பேத்கர் செய்த ஏற்பாடு பாதுகாப்பிற்குரியதாக அமைந்தது. The system of separate electorates was abolished in the new Constitution. Ambedkar was so right that article 334 was repeatedly amended to extend the period of reservation என்பதையும் சேர்த்தே பார்க்கவேண்டும் என பந்த்ரே விளக்குகிறார்.

விடுதலை இந்தியாவில் நாடாளுமன்றத்தில் பட்டியல் பிரிவினர் இடம்பெற்றும் தலித்களின் சமூக வாழ்க்கையில் பெரும் முன்னேற்றம் ஏற்படவில்லை. வாய்ப்புகளில் சமத்துவம் என்பது ஏட்டளவிலேயே உள்ளது. தலித்கள் மீதான ஒடுக்குமுறைகள் நின்றபாடில்லை. அம்பேத்கர் பெரிதும் நம்பி உழைத்த முழக்கங்களான Liberty, equality and fraternity sounds to them a hollow slogan என்கிற கவலை தோய்ந்தக்குரலை பந்த்ரே வெளிப்படுத்தியிருக்கிறார்.

புருஷோத்தம் மாவலங்கர் புகழ்வாய்ந்த தாதாசாகேப் மாவலங்கரின் மகன். தாதாசாகேப் விடுதலைபெற்ற இந்திய நாடாளுமன்றத்தின் சபாநாயகர். மகனான புருஷோத்தம் மாவலங்கர் ஹரால்ட் லாஸ்கியின் மாணவர். நாடாளுமன்ற உறுப்பினராக இருந்தவர். அம்பேத்கர் குறித்து புருஷோத்தம் மாவலங்கர் குறிப்பிட்டுள்ளதை பார்க்கலாம்.

அனைத்து அம்சத்திலும் அம்பேத்கர் தேசியத்தலைவராக மதிக்கப்படவேண்டியவர். ஒடுக்கப்பட்டவர்களின் உரிமைகள் மற்றும்

வாழ்க்கை மேம்பாட்டைப் பொறுத்துத்தான் இந்தியா உண்மையான சுதந்திரநாடு என சொல்லப்படமுடியும். இந்த மேம்பாட்டைக்கொணரப் போராடிய தலைவர் அம்பேத்கர்.

கல்வி வாய்ப்பு என்பதற்கு அவர் முன்னுரிமை கொடுத்தார். அவரே தன் அளவில் கற்றறிந்த, புலமை வாய்ந்த அரசியல் தலைவராக இருந்தார். அவரின் இச்சிறப்பிற்கு நாடு பெருமைப்படவேண்டும். அவரால் எந்த முட்டாள்தனத்தையும் சகித்துக்கொள்ள முடியவில்லை.

டாக்டர் அம்பேத்கர் தனித்துவம் நிறைந்த தனிநபர் எனும் குணத்திற்குரியவர். அரைவேக்காட்டுபேர்வழிகளை அவர் சகித்துக்கொண்டதேயில்லை. அதே நேரத்தில் தனக்கு ஒதுக்கப்பட்ட வேலைகளை பிறருடன் நேர்த்தியாக இணைந்து செய்தும் காட்டினார். தன் சொந்த மனிதர்கள் எனக் கருதியவர்களின் மேம்பாட்டிற்காக அவர்களை திறம்பட வழிநடத்துவதில் கவனம் குவித்தார். அவர் இயக்கங்களை நடத்தியிருந்தாலும் தன்னை அமைப்பு மனிதனாக 'organisation man' ஆக நிறுவிக்கொண்டதில்லை. பலநேரங்களில் அவர் தனித்த காவலாளியாகவே (a lone sentinel) காணப்பட்டார்.

பம்பாயில் அம்பேத்கர் ஜூலை 19, 1937ல் எம் எல் ஏ ஆனார். முன்னதாக அவர் நியமன உறுப்பினராக இருந்தார். அவரது பட்ஜெட் விவாதங்கள் அவரின் மேதமையை காட்டும். விமர்சனங்கள் தெறிக்கும். அவையில் உள்ளோர் அனைவரும் தன்னை உற்று கவனிக்க வைப்பார். அடிப்படைக் கல்வி, தொழில் தகராறு, மொழிவாரி மாநிலம், இரண்டாம் உலக யுத்தத்தில் இந்தியப்பங்கேற்பு போன்ற விவாதங்களில் அவரது அறிவுக்கூர்மை பளிச்சிட்டது.

இன்றுள்ள நிலையிலேயே தொடர்ந்து கல்வி கற்பிக்கப்படும் என்றால் பெண் குழந்தைகள் முழுமையாக கல்வி பெற 300 ஆண்டுகள் பிடிக்கும் எனப் பேசி மனசாட்சியை உலுக்கினார். அன்று மாகாண பிரதமராக இருந்த பி ஜி கேர், உள்துறைஅமைச்சர் முன்ஷி அனைவருடனும் அவர் கடுமையான விவாதங்களை மேற்கொண்டவர்.

ஆகஸ்ட் 23 1937 அன்று அம்பேத்கர் முக்கிய மசோதா ஒன்று குறித்து கருத்தை வெளியிட்டார். அமைச்சர்களுக்கு ஒரே மாதிரியான standard salary என்பது சரியல்ல. அவரின் சமூக பின்புலத்திற்கேற்ப ஊதியம் என்பது அவசியம். திறமை, நிர்வாக நேர்மை, ஜனநாயக பண்புகள் போன்றவைகளும் அளவுகோலாக இருக்கலாம் என்றார். அமைச்சர்கள் தாங்கள் சிறந்தவர்களாக, கற்பவர்களாக எடுத்துக்காட்டானவர்களாக இருக்கவேண்டும். “The executive must be the brain trust” என்கிற மேற்கோளை அவர் தந்தார்.

நேரு அமைச்சரவையில் அம்பேத்கர் சட்ட அமைச்சராக நியமிக்கப்பட்டார். ‘இந்து கோடு’ பில் கொணரும்போது கடும் எதிர்ப்பைக் கண்டார். அமைச்சரவையிலிருந்து அவரின் விலகலுக்கு இதுவும் முக்கிய காரணமானது. உடல்நிலை சரியில்லாததால் அவர் விலகினார் என்று மாவலங்கர் சொல்கிறார். அம்பேத்கர் உடல்நிலை சரியில்லை என சொல்லி எந்த பொறுப்பிலிருந்தும் தான் வெளியேறியதில்லை என தன் விலகல் குறித்த உரையில் தெளிவுபடுத்தியிருந்ததை மாவலங்கர் ஏன் சுட்டிக்காட்டத் தவறினார் எனத் தெரியவில்லை.

அம்பேத்கர் எப்போதும் நேர்த்தியாக உடை அணிந்து வருவார். கம்பீரமாக எதையும் உறுதியான தொனியில் பேசக்கூடியவராக இருந்தார். கேள்வி நேரத்தில் அவரின் திறமை கூடுதலாக தெரியும். கச்சிதமான பதிலை உரியவகையில் தர முயற்சிப்பார். எது கேட்கப்படுகிறதோ அதற்கு சம்பந்தமில்லாமல் எதையும் அவையில் தெரிவிக்க மாட்டார். அவரது பதில் அதிகாரபூர்வமானதாக சரியானதாக இருக்கும். அவர் கடுமையாக நடந்துகொள்கிறார் என அவை உறுப்பினர்கள் சிலர் நினைப்பர். ஆனாலும் அவரின் ஆளுமை காரணமாக அவர் காட்டும் கோபம் பெரிதாக எடுத்துக்கொள்ளப்படாமல் போகும் எனச் சொல்கிறார் மாவலங்கர்.

அம்பேத்கரின் விசாலமான அறிவையும் இதயத்தையும் அவர் இந்திய நாட்டின் அரசியலமைப்பு சட்ட வரைவில் வெளிப்படுத்திய விவாதங்களில் காணமுடியும். -He acted superbly as an “Assembly Man”. He led, as well as was led, in this project என காட்டுகிறார் மாவலங்கர்.

அம்பேத்கரின் உரையிலிருந்து சிறந்த மேற்கோள் ஒன்றை மாவலங்கர் எடுத்து அவரின் எச்சரிக்கையை புலப்படுத்துகிறார்.

Thus spoke Ambedkar 25th Nov 1949 in the Constituent Assembly

“However good a Constitution may be, it is sure to turn out bad because those who are called to work it, happen to be a bad lot. However bad a constitution may be, it may turn out to be good, if those who are called to work it, happen to be a good lot. The working of a Constitution does not depend wholly upon the nature of the Constitution”.

அரசியல் அமைப்பு சட்டம் நல்லதாக தொழிற்படுவது என்பது அதை கையாள்பவர்களை பொருத்தே இருக்கிறது. ஆகவே... என்கிற எச்சரிக்கை உணர்வை பொறுப்பை மக்களிடம் அம்பேத்கர் விட்டுச் சென்றுள்ளார்.

பேராசிரியர் சித்தேஸ்வர் பிரசாத் (Prof. Sidheshwar Prasad) பீகார் நாளந்தாவிலிருந்து காங்கிரஸ் சார்பில் பலமுறை லோக்சபாவிற்கு தேர்ந்தெடுக்கப்பட்டவர். பல புத்தகங்களை இந்தியில் எழுதியவர். அம்பேத்கர் குறித்து சுருக்கமாக அவரின் கருத்து இங்கு இடம் பெறுகிறது.

அம்பேத்கர் சமூக மாற்றத்தை விதைத்த முன்னோடி. அம்பேத்கரின் வாழ்நாள் போராட்டம் சமூகநீதிக்கானது- அநீதிக்கு எதிரானது. சமூக பொருளாதார ஜனநாயகம் வராமல் அரசியல் ஜனநாயகம் முழுமை அடையாது. தன் வாழ்நாளுக்குள்ளாகவே தனது கனவிற்கான அடிப்படைகள் நடைமுறைக்கு வருவதை அவரால் காணமுடிந்தது.

அம்பேத்கர் தன் உரையில் நாடு சந்திக்கும் முரணை சுட்டிக்காட்டினார். அரசியலில் ஒரு மனிதன் ஒரு மதிப்பு கொண்டு நுழையும் நாம் சமூக, பொருளாதார அசமத்துவத்தை சுமந்தே செல்கிறோம். சமதையான சமூகம் என்பது புறக்கணிக்கப்பட்டே வருகிறது. இந்த முரண் எவ்வளவு காலம் நீடிக்கமுடியும் என்கிற கேள்வியை அவர் எழுப்பினார். சமூக பொருளாதார சமத்துவம் என்கிற கோட்பாட்டில் எவ்வளவு காலம் நாம் பாராமுகமாக இருக்கமுடியும் . அதன் மறுப்பு என்பது அரசியல் ஜனநாயக அமைப்பிற்கே ஆபத்தானதாக மாறிவிடும். அதன் அடிப்படையே தகர்ந்து போகும் என்கிற அபாய சங்கை அம்பேத்கர் ஊதியே சென்றுள்ளார்.

அவரைப்பொறுத்தவரை வாழ்வின் தத்துவம் சமத்துவம், சுதந்திரம், சகோதரத்துவம் நிரம்பியதாக இருக்கவேண்டும். இதை அவர் மும்மூர்த்திகள் என அழைப்பார். உடலின் ஏதோ ஒரு பாகம் பழுதுபட்டாலும் எப்படி பலவீனப்படுமோ அப்படித்தான் இந்த அங்கங்கள் எது குறைந்தாலும் மனித வாழ்க்கை பங்கப்படும். ஜனநாயகம் மெல்ல அழுகிப்போகும் என்றார்.

'வர்ணாஸ்ரமம்' என்பதை எதிர்த்து போராடவேண்டும்- அப்போதுதான் விடுதலைக்கு சரியான அர்த்தம் கிடைக்கும் என்றவர் அம்பேத்கர். ஜனநாயகத்தின் சீரான வளர்ச்சிக்கு பிறப்பு அடிப்படையிலான மேல் சாதி- கீழ் சாதி எனும் கட்டமைப்பு தகர்க்கப்படவேண்டும் என அவர் விழைந்தார். அவரின் கனவு இந்திய ஜனநாயகம் வளர்ந்தோங்கிய ஒன்றாக இருக்கவேண்டும் என்பதாகவே இருந்தது.

ரேணுகா ராய் தனது 16 ஆம் வயதிலேயே காந்தியின் செயல்பாடுகளில் ஈர்க்கப்பட்டவர். ரேணுகா லண்டன் எகானமிக் ஸ்கூல் சார்ந்தவர். அரசியல் நிர்ணயசபை மற்றும் நாடாளுமன்ற உறுப்பினராக இருந்தவர். அம்பேத்கர் குறித்து அவர் சொல்லியதை சுருக்கமாக காண்போம்.

தான் நியாயம் என உணர்ந்ததிலிருந்து எளிதில் வழுவாமல் இருக்கும் உள உறுதிகொண்டவர் அம்பேத்கர். தனது கருத்துக்காக போராடிக்கொண்டிருந்தாலும் எதார்த்த நிலைகளுக்கேற்ப சமரசங்களை அனுமதித்தவராகவும் அவர் இருந்தார். கிராமங்களில் நிலவும் சாதிய மேலாதிக்க நிலையில் பஞ்சாயத்து ராஜ் எனப்பேசுவது பயனளிக்காது என அம்பேத்கர் கருதினார். அதனால் அதை வழிகாட்டும் நெறிகளின் பகுதியாக இருக்கலாம் எனக்கருதினார். அதன் வடிவமாக அரசமைப்பு சட்ட ஷரத்து 40 அமைந்தது.

Article 40 :Directive Principles of State Policy as follows: “The State shall take steps to organise village panchayats and endow them with such powers and auth0rity as may be necessary to enable them to function as units of self-government”. ராஜிவ் ஆட்சிகாலத்தில் பஞ்சாயத்து நகர்பாலிக சட்டம் உருவானது.

அதேபோல் இந்து தொகுப்பு சட்டத்தில் பெண்களுக்கு சொத்துரிமை

என்பதில் அம்பேத்கர் உறுதியாக நின்றார். நாடாளுமன்றத்தில் அதற்கு எதிர்ப்பு இருந்தது. அம்பேத்கருக்கும் எதிர்ப்பாளர்களுக்கும் இடையில் நேரு இருந்து அதை 4 பகுதிகளாக பிரித்து நிறைவேற்ற முயற்சித்தார். தன்னை சந்தித்த பெண் தலைவர்களிடம் வருகிற நாடாளுமன்ற தேர்தலில் தேர்தல் அறிக்கையாக வைத்துவிட்டோம் எனில் எதிர்ப்பாளர்கள் வாயை அடைத்துவிடலாம் எனவும் நேரு தெரிவித்து வந்தார். ரேணுகா ராய், துர்கா பாய் போன்றவர்களுக்கு இதை தள்ளிப்போடுவதில் அம்பேத்கர் போலவே விருப்பமில்லை. நேருவின் முன்முயற்சியால் பின்னர் அம்மசோதா இரு பிரிவுகளாக திருமணம்- சொத்துரிமை என சட்டமானது.

இப்போதைக்கு பஞ்சாயத்து ராஜ் வேண்டாம் என அன்று தள்ளிப்போட்டனர். இந்து கோடு கொண்டுவருவதற்கு அம்பேத்கர் எடுத்த பெரும் முயற்சிகளுக்காக இந்தியப்பெண்கள் அம்பேத்கருக்கு கடன்பட்டுள்ளனர்.

எஸ் எல் ஷக்தர் (S L. Shakdher) இந்திய நாடாளுமன்ற செயலராக இருந்தவர். அவர் தலைமை தேர்தல் ஆணையராகவும் இருந்துள்ளார். அம்பேத்கர் குறித்து அவர் பதிவைக் காண்போம்.

அம்பேத்கர் மேற்குவங்கத்திலிருந்து அரசியல் நிர்ணயசபைக்கு தேர்ந்தெடுக்கப்பட்டார். புகழ்வாய்ந்த வரலாற்றாளரான எம் வி பைலி அம்பேத்கர் குறித்து பேசியதை ஷக்தர் எடுத்துக்காட்டுகிறார். தனது விவாத கூர்மையால் மற்ற எவரையும்விட அரசியல் நிர்ணயசபையில் அம்பேத்கர் மிளிர்ந்தார். அவரிடம் இருந்த தெளிவு பிரமிக்கத்தகுந்தது. தனது விமர்சகர்களையும் காதுகொடுத்து கேட்கும் பொறுப்புணர்வை அவர் காட்டினார். அவரை 'நவீன மனு' என அழைக்கலாம்.

நேரு அவர்கள் அம்பேத்கர் மறைவை நினைவுகூர்ந்து உரையாற்றும்போது இந்து ஒடுக்குமுறைகளுக்கு எதிராக கலகக்கொடி உயர்த்தியவர் என குறிப்பிட்டார். அவர் எதை எதிர்த்து போராடினாரோ அதை எதிர்த்து நாம் அனைவரும் போராடவேண்டியவர்களாகவே இருக்கிறோம். இந்த நாடாளுமன்ற அவைக்கூட அவர் பிரதிபலித்த வண்ணமே இயங்குகிறது என புகழாரம் சூட்டினார்.

இந்த நாட்டில் பெரும்பான்மை- சிறுபான்மை என இரு பிரிவினருமே தவறான அணுகுமுறையை மேற்கொண்டு வருகின்றனர். சிறுபான்மையினர் இருப்பை பெரும்பான்மையினர் புறக்கணிக்கக்கூடாது. அதேபோல் தங்கள் இருப்பை பெரிதுபடுத்திக்கொண்டே சிறுபான்மையினர் இருப்பது சரியல்ல என அம்பேத்கர் கருதினார்.

சிறுபான்மை என்பது வெடிமருந்து போன்றது- எப்போது வேண்டுமானாலும் பற்றிக்கொண்டுவிடும் என்கிற விழிப்புணர்வு தேவை. சிறுபான்மையினருக்கு பாரபட்சம் காட்டக்கூடாது என்பதை பெரும்பான்மையினர் உணர்ந்து நடந்துகொள்ளவேண்டும் என்பது அம்பேத்கரது அறிவுரை. அவர்களை உதாசீனம் செய்யத்துவங்கிவிட்டால் அவர்களின் இருப்பே கேள்விக்குள்ளாகும் என மிகுந்த தூரப்பார்வையுடன் இதை அவர் விளக்கினார்.

வெளிப்படையாக பத்திரிகை சுதந்திரம் பற்றி அரசியல் அமைப்பு சட்டம் ஏன் பேசவில்லை என்கிற விமர்சனம் வந்தது. அம்பேத்கர் இதற்கும் விளக்கம் தந்தார். இந்திய குடிமகன் என்பாருக்கு உள்ள உரிமைகளைத் தாண்டி பிரஸ் என்பதற்காக எவ்வித தனிச்சலுகையும் அவசியமில்லை. பத்திரிகை ஆசிரியரும் குடிமகன் என்கிற உரிமையுடன்தான் செயல்படப் போகிறார்- “freedom of speech and expression என சொல்லியுள்ளது போதாதா என அவர் எதிர் கேள்வி எழுப்பி தன் பதிலை தந்தார்.

அரசியல் நிர்ணய சபையின் தலைவராக இருந்த ராஜேந்திர பிரசாத் அம்பேத்கரின் செயல்பாட்டை விதந்து பேசினார். அம்பேத்கர் போல ஆர்வமும் உற்சாகமும் ஈடுபாடும் கொண்டு வேலை செய்த உறுப்பினர் வேறு எவரும் இல்லை என்பதை தான் உணர்ந்ததாக அவர் தெரிவித்திருந்தார். அவரை நகல்வரைவுக்குழு தலைவராக தேர்ந்தெடுத்தது எவ்வளவு சரி என்பதை மட்டும் அவர் நிரூபிக்கவில்லை - அதற்கு கூடுதல் ஒளிர்வையும் (has added luster) அவர் ஏற்படுத்தினார்.

அம்பேத்கர் பிப்ரவரி 1951ல் அறிமுகம் செய்த இந்து கோடு மசோதாவை 1952 தேர்தலுக்கு முன்னர் சட்டமாக்க விழைந்தார். அவர் தன் வாழ்நாட்களுக்குள் அம்மசோதா பகுதிகளாக சட்டமானதை கண்டார். அவர்

உருவாக்கிய அடிப்படைகள் மேலானதாக இருந்தன எனக் கருதுபவர்களும் உண்டு.

.அம்பேத்கர் எப்போதும் புத்தகங்கள் சூழவே வாழ்ந்தார். அவரை பார்ப்பது, உரையாடி புதிய புதிய கருத்துக்களைப் பெற்றது மகிழ்ச்சியான தருணங்களாகவே இருந்தன என நினைவு கூர்ந்துள்ளார் ஷக்தர்.

அக்சய் குமார் ஜெயின் புகழ் வாய்ந்த பத்திரிகையாளர். முப்பது ஆண்டுகளுக்கு மேலாக நவபாரத் டைம்ஸ் எடிட்டராக இருந்தவர். பத்மபூஷன் விருதுக்குரியவர். அவர் அம்பேத்கர் குறித்து சுருக்கமான பதிவை தந்துள்ளார்.

அம்பேத்கர் 1920ல் மூக்நாயக் மாதம் இருமுறை பத்திரிகையை துவக்கினார். நான்கு ஆண்டுகளுக்கு பின்னர் 'பகிஷ்கரித் ஹிட்காரி' எனும் பத்திரிகை' நடத்தினார். அதற்கு அடுத்த மூன்று ஆண்டுகளில் 1927ல் மாதம் இருமுறை பத்திரிகையாக 'பகிஷ்கரித் பாரத்' தொடங்கி நடத்திவந்தார்.

பொதுக்கிணற்றில் தண்ணீர் எடுக்கும் போராட்டம் ஒன்றையும் அம்பேத்கர் நடத்தினார். இந்துக்கள் கலவரத்தில் ஈடுபட்டனர். போலீசார் தலையிட்டு அம்பேத்கரை கலைந்து போக வைத்தனர். அவர் அதை நீதிமன்ற வழக்காக்கி பம்பாய் உயர்நீதிமன்றம் சென்று 10 ஆண்டுகள் போராடி உரிமையை நிலைநாட்டினார். 1935ல் அவர் நண்பர்களிடத்திலும் பத்திரிகையாளர்களிடத்திலும் இந்துமதத்தில் தன்னால் தொடர்ந்து நீடிக்க இயலாது என்பதை தெரிவிக்கத் துவங்கினார். ஆனால் உடனடியாக அவரால் அதை அமுலாக்கமுடியவில்லை. அம்பேத்கர் தான் சொல்லிவந்தபடி அக்டோபர் 14 1956ல் அவர் ஆயிரக்கணக்கானவர்களுடன் புத்தமதம் தழுவினார்.

இடைக்கால அரசாங்கம் 1946ல் பதவியேற்றவுடன் அரசியல் அமைப்பு சட்ட நிபுணர் எவரையாவது தேடவேண்டும் என தன் கவலையை நேரு காந்தியிடம் தெரிவித்தார். சரோஜினி அவர்களும் உடன் இருந்தார். நேரு ஜென்னிங்ஸ் என்பாரின் பெயரையும் காந்தியிடம் குறிப்பிட்டார். காந்தி அப்போது அம்பேத்கர் பெயரைக் குறிப்பிட்டார்.

இந்து சட்ட தொகுப்பு குறித்த வேறுபாடுகளால் அம்பேத்கர் பதவி விலகினார். அம்பேத்கர் பதவிவிலகல் ஏன் என அவர் தந்த விளக்கத்தில் இந்து சட்டம் மட்டும் அல்லாமல் பல்வேறு அம்சங்கள் குறிப்பிடப்படுகின்றன. வேறுபாடுகள் வளர்ந்து ‘இந்து சட்டம்’ குறித்த பிரச்னை அவர் வெளியேறத்தூண்டியது என சொல்லமுடியும்.

சுருக்கமான பதிவை அக்சர் தந்தாலும் காந்தி நேரு இருவரும் ஆலோசித்து அம்பேத்கரை பயன்படுத்தவேண்டும் என்கிற முடிவிற்கு வந்ததை உறுதிப்படுத்துகிறார். நேரு அமைச்சரவையில் ஏற்பட்ட கசப்புகள், காந்தியடிகளின் மறைவு, இந்துகோடு பில்லில் அம்பேத்கரின் எதிர்பார்ப்பு நிறைவேறாமை போன்ற சூழல்கள் அம்பேத்கர் இணைந்து பணியாற்ற முடியாமல் செய்தன என புரிந்துகொள்ளலாம்.

நேரு- அம்பேத்கர் இணக்கமாக பணியாற்ற முடிந்திருந்தால், அம்பேத்கர் வாழ்நாட்கள் 1956க்கு பின்னரும் கூடியிருந்தால் இந்திய அரசியலில் மேலும் விரும்பத்தக்க மாற்றங்கள் வந்திருக்கக்கூடும் என்று தோன்றுகிறது. ஆனால் இந்த ‘if களால்’ என்ன செய்யமுடியும்?

# 4. அம்பேத்கரின் பகவத்கீதை விமர்சனம்

பண்டைய இந்தியாவில் புத்தத்தின் புரட்சியும் அதை வீழ்த்த நடத்தப்பட்ட பிராமணிய எதிர்புரட்சியும் குறித்து அம்பேத்கார் விரிவான ஆய்வு ஒன்றை செய்திருந்தார். அதில் 'எதிர்புரட்சி' தத்துவ அடிப்படையில் பாதுகாப்பை கிருஷ்ணன் கீதையிடமிருந்து எவ்வாறு பெற்றுக்கொண்டது- கீதை எப்படிக்கொடுத்தது என்பதை விவரிக்கிறார்.

புத்தம் நலிவுற்றதற்கு ஆறு பிராம்மண இலக்கியங்களை பாபாசாகேப் அம்பேத்கர் காரணமாக காட்டினார். அதில் கீதை ஒன்று. மற்ற இலக்கியங்கள் வேதாந்தம், மனுஸ்மிருதி, மகாபாரதம், ராமாயணம், புராணங்கள் . பகவத்கீதை காலம் பற்றி ஆய்வு செய்யும்போது அதில் திலகர், தெலாங், கோசாம்பி இடையில் ஒரே கருத்தில்லாமையை அவர் சுட்டிக்காட்டுகிறார்.

வியாசர் பாரதம் என்பது வரலாற்று கதை. ஆனால் பின் வந்தவர்கள் அதில் அறநெறி, சமுதாய நியதி- நீதி கதையாக போதனை நூலாக மாற்றிவிட்டனர் என்பது அவரின் குற்றச்சாட்டு. அதன் காலம் பற்றி வேறுபட்ட கருத்துக்கள் இருந்தாலும், காலந்தோறும் அதில் மாற்றங்கள் இடம் பெற்றன என்பதில் வேறுபாடில்லை என்கிறார் அம்பேத்கர்.

பேராசிரியர் கார்பே, ஹாப்கின்சன் போன்றவர்களின் மேற்கோள்களை அம்பேத்கார் எடுத்துக் காட்டுகிறார். கூர்மதி படைத்த மேதை ஒருவரால் உருவான படைப்பன்று கீதை என்கிறார். பல பாடல்கள் உபநிடதங்களிலிருந்து எடுத்தாளப்பட்டுள்ளன. கீதை சில இடங்களில் விழுமியம் உள்ளதாகவும் பல இடங்களில் சிறுபிள்ளைத்தனமாகவும் இருப்பதாக அம்பேத்கர் வெளிப்படுத்துகிறார். கீதை பாடாலாசியருக்கு இலக்கண விதிகள் தெரியவில்லை என்பதை பேராசிரியர் ராஜ்வதே எடுத்துக் காட்டுவதை அம்பேத்கார் சுட்டிக்காட்டுகிறார். ராஜாராம் சாஸ்திரிகள் என்பார் 60 பாடல்கள் மட்டுமே மூல சிறப்புகொண்டவை மற்றவை இடைச்செருகல் என கூறுவதையும் தெரிவிக்கிறார். ராஜ்வதே அத்தியாயம் 10, 11 போலியானது எனக் கூறுவதாக அம்பேத்கார் மேற்கோள்

காட்டுகிறார்.

போரிடுவதா வேண்டாமா என்பதுதான் அதில் எழுப்பப்படும் கேள்வி. பதில் தரும் முறையில் கிருஷ்ணன் மிக சாதாரண மனிதனாக துவங்கி படிப்படியாக கடவுள் நிலைக்கு தன்னை உயர்த்திக்கொள்கிறார். வேதங்களை, பலியிடுதலை குறைத்து மதிக்கும் பாடல்கள் இருப்பதையும் அம்பேத்கர் சுட்டிக் காட்டுகிறார்.

எதிர்புரட்சிக்கு தத்துவரீதியான பாதுகாப்பு கிருஷ்ணனும் கீதையும் என்ற கட்டுரை ஒன்றை 40 பக்க அளவில் அம்பேத்கர் எழுதியிருந்தார். அக்கட்டுரை முழுமைபெறவில்லை என அம்பேத்கர் நூல்களை தொகுத்தவர்கள் நமக்கு தெரிவிக்கிறார்கள். இந்து சமயத்திற்கு கிருஸ்துவ மத பைபிள் போன்ற வேதாகமா கீதை என்கிற கேள்வியை அவர் எழுப்புகிறார். கீதை நற்செய்தி தரும் வேதமன்று என பதிலாக தருகிறார். சமயத்தை காக்க அது தத்துவத்தை பயன்படுத்தியது என்கிறார். நான்குவர்ண கோட்பாட்டிற்கு தத்துவ பாதுகாப்பை தருகிறது. கர்மயோகத்துடன் பக்தியோகம் இணைத்து அனாசக்தி கோட்பாட்டை வைக்கிறது என்கிறார்.

செயலுக்கும் அறிவிற்கும் இடையே நடைபெறும் பொதுவான தத்துவ விசாரணைப் பற்றி கீதை அக்கறை கொள்ளவில்லை. பொதுமையான தத்துவப்பொருள் குறித்தும் அது பேசவில்லை என்ற முடிவிற்கு அவர் வருகிறார்.

புத்தமத தாக்கத்திலிருந்து சமுகத்தை காக்க விரும்பியது கீதை. புத்தம் எதிர்த்துவந்த நான்குவர்ண கோட்பாட்டிற்கு வேதங்களால் அவை விதிக்கப்பட்டவை, பிழையற்றவை, கேள்விக்கு அப்பற்பட்டவை என சொல்ல வருகிறது கீதை. கொலையை கொலையன்று என வழக்குரைக்கும் கிருஷ்ணன் மனநோய் மருத்துவமனைக்கு அனுப்பப்பட வேண்டியவன் என கடுமையான விமர்சனத்தை அவர் வெளிப்படுத்துகிறார்.

கீதை புத்தருக்கு எதிரான புரட்சியை உயிர்ப்பித்து காத்து வருகிறது. பகவத்கீதை கர்மயோகத்தை மாற்றி உரைப்பதுடன் எளிய தூய கர்மயோகிகளை சாடுவதாகவும் அம்பேத்கார் சொல்கிறார். கீதையும்

புத்தமதமும் அக்கால ‘சமயத்தில்’ நடந்த ஆன்மீக புரட்சியின் இருவடிவங்கள். பிராமணியத்திற்கு புத்தமதம் கொடுத்த அடியினால் தளர்ச்சியுற்ற பிராமணியத்தை தூக்கிப்பிடிக்கும் முயற்சியே கீதை என்கிறார்.

புத்தமதம் பற்றி அறிந்த எவராலும் புத்த கோட்பாடுகளை கீதை எடுத்து மொழிவதை மறுக்க இயலாது என்பதை அவரது உறுதிபட தெரிவிக்கிறார். அர்ஜூனன் கேட்டது தத்துவ வினாக்கள் அல்ல. உலகியல் சிக்கல்களை எத்ர்கொள்ளும் சாதாரண மனிதன் கேட்ட இயல்பான வினாக்கள்தான் அவை. கிருஷ்ணனை ஈஸ்வரனாக சித்தரிக்கும் பகுதிகள் மெகஸ்தனிஸ் காலத்திற்கு பின்னர் வந்திருக்கலாம் என்பது அவர் கருத்து.

அம்பேத்கார் தனது ஆரம்ப காலத்தில் கீதை தாழ்த்தப்பட்டவர்களுக்கும் ஏற்ற ஒன்று என கருதியதாக கீதை ஆய்வாளர் கௌடா தெரிவிக்கிறார். பம்பாய் உயர்நீதிமன்றத்தில் மனுஸ்மிருதி எதிர்ப்பு போராட்டத்தில் ஏப்ரல் 2, 1930ல் தனது வாதமாக ’ I do not accept any book except Bhagavat Gita to be worthy of respect or as an authority. Though I do not accept the authority of Vedas, I consider my self to be sanatan hindu” என குறிப்பிட்டதாக கௌடா தெரிவிக்கிறார். அவரின் அனுபவம் மற்றும் தொடர் ஆய்விற்கு பின்னர் கீதையையும் புத்தமத எதிர்ப்பையும் பிராம்மண வகைப்பட்டதாக கருதலானர்.

புத்தரின் மகத்தான அகிம்சை, சமத்துவ சிந்தனைகளால் பிராம்மண அதிகாரம் ஆட்டம் கண்டது. இதை எதிர்க்கும் வகையில் புஷ்யமித்திரன் தலைமையில் எதிர்புரட்சி நடந்த வரலாற்றை அவர் விளக்குகிறார். இதை சாவர்க்கரோ மீட்பு, பெருமைக்குரிய சகாப்தம் என்றார். மௌரியர் ஆட்சியில் 140 ஆண்டுகள் பிராம்மணர் ஒடுக்கப்பட்டு இருந்தனர். ஜைமினி பூர்வாம்ச கோட்பாடுகள் நிற்கமுடியாத சூழலில் அதன் தத்துவ பஞ்சத்தை போக்கிட கீதை பிறந்ததாக அம்பேத்கார் விளக்குகிறார். கீதையில்லாவிட்டால் எதிர்புரட்சி தோற்றிருக்கும் என அவர் கணிக்கிறார். இன்றுவரை எதிர்புரட்சி நிலைப்பெற்றிருக்க கீதைதான் காரணம் என அதன் வலிமையை கூறுகிறார். அதே நேரத்தில் இந்திய சமூகத்தை கீதையால் ஒருங்கிணைக்க முடியும் என்பதை அவர் ஏற்கவில்லை. குரான், பைபிள் போன்ற புனித புத்தகமாக அதை ஏற்கமுடியாது என்கிறார்.

" TheBhagavat Gita is not a gospel and it can therefore have no message and it is futile to search for one. It is neither a book of religion nor a treatise on philosophy.. It uses philosophy to defend religion " என்பது அவரது ஆழமான கருத்து. பகவத் கீதையின் 4 அம்சங்களாக அவர் குறிப்பிடுவது

1. நான்தான் சதுர்வர்ணத்தை உருவாக்கியவன் என்கிற ஒப்புதல் மொழி
2. அவரவர் தர்மத்தை அவரவர் பின்பற்றவேண்டும். மற்றவர் தர்மத்தை பின்பற்றுவது ஆபத்தானது )
3. கல்வியறிவில்லாதவர் தொழில்மீது பற்றுள்ளவர். அந்த நம்பிக்கையை அறிவுள்ளவர் மாற்றவேண்டும்
4. எப்போதெல்லாம் இக்கடமைகள் வீழ்கிறதோ அப்பொழுதெல்லாம் நான் மீண்டும் அவதரிப்பேன்

இதை சுட்டிக்காட்டி மனுஸ்மிருதி போலவே கீதை பேசுகிறது என்பார் அம்பேத்கர். யுத்தம், அழிவு குறித்து அது கவலைப்படவே இல்லை. சாவு தவிர்க்கமுடியாதென்றால் எப்படி நிகழ்ந்தால் என்ன – சாவிற்கு ஏன் அஞ்சுகிறாய் என அது பேசுகிறது. போர், கொலை குறித்து அதற்கு மனசாட்சி என்கிற பிரச்னையெல்லாம் இல்லை. இந்த வன்முறைக்கு அழுத்தம் வருவதே புத்தமத எதிர்ப்பினால்தான் என்று தன் பார்வையை வைக்கிறார். கர்மம், ஞானம் என்கிற வார்த்தைகளுக்கெல்லாம் மதிப்பைக் கூட்டி அதை ஏதோ உயர் ஞானம் போல் சித்தரிக்கும் வேலையைத்தான் கீதை செய்துள்ளது என்கிறார் அம்பேத்கர்.

# 5. பாபாசாகேப் அம்பேத்கரின் அரசியல் பொருளாதார சிந்தனைகள்

(மே 1998 மேடை இதழில் வெளிவந்தது)

மனிதர்கள் அடையாளமற்று வாழ முடியுமா? கற்பனை செய்வது கூட கடினமாக உள்ளது. பெயர், ஊர், சாதி, மதம், இனம், தேசம், இசம் என ஏதோ ஓர் அடையாளம் உறவாடிக்கொண்டே வருகிறது. அடையாளமற்று போவதல்ல பிரச்சனை. ஒற்றை அடையாளம்- அதுவே அடையாளம் என ஒன்றை மட்டும் புனிதப்படுத்தி மற்றவற்றை ஒதுக்கிவிடுவது- கண்டுகொள்ளாமல் புறந்தள்ளுவது- ஒன்றை அதிகாரத்திற்கு உயர்த்திவிடுவது- மற்றவற்றை அதற்கு கீழிறக்கிவிடுவது என்பதே பிரச்சனையாகிறது. மனிதர்களுக்கிடையிலும், ஒரே மனிதருக்குள்ளும் பல அடையாளங்கள் நிலவுகின்றன. நிகழ்ச்சிநிரலில் ஒவ்வோர் காலத்திலும் ஏதேனும் ஒன்றை பிரதானப்படுத்தவேண்டிய தேவை எழலாம். இதற்கு பொருள் அந்த நேரத்தில் வேறு அடையாளங்கள் ஏதுமே இல்லை என்பதாகாது.

அம்பேத்கருக்கும் பொதுவாக ஏற்கப்பட்ட பிரதான அடையாளம் என ஒன்று உள்ளது. அந்த அடையாளம் பரவலாக வெளிக்கொணரப்பட்டு அறியப்பட்டுள்ளது. அது சில நேரங்களில் புனைவாகக்கூட உயர்த்தப்பட்டுள்ளது. ஆனால் இதற்கு நேர் எதிராக, அம்பேத்கரின் தீவிர ஆளுமை கொண்ட மேதைமை- நிகரற்ற அறிவாற்றலின் நீள்பாதை- தன் வழியில் சந்தித்த அனைத்தையும் விசாரித்தது- ஆய்வு செய்தது என்பது போதுமான அளவிற்கு வெளிக்கொணரப்படவில்லை. சாதி, தீண்டாமை கொடுமை, இந்துமதம், சாதி ஒழிப்பு பற்றிய அவரது சிந்தனைகள் இந்திய சமூகத்தின் செவ்வியல்களாக ஏற்கப்படவேண்டியவை. அவரது அரசியல் பொருளாதார சிந்தனைகள் குறித்த விவாதங்கள் தொடரப்படவேண்டும் என்கிற நோக்கில் சில அம்சங்கள் இங்கே முன்வைக்கப்படுகிறது.

மேற்கித்திய சிந்தனை மரபின் தாக்கத்திற்கு உள்ளானவர்களில் அம்பேத்கரும் ஒருவர். மார்க்சிய சிந்தனைகளை உள்வாங்கி விமர்சனரீதியான அணுகுமுறைகளையும் மேற்கொண்டவர். இந்தியாவிற்கு உகந்தது நாடாளுமன்ற அரசாங்கமா- சர்வாதிகாரமா என்பதை தொடர்ந்து விவாதத்திற்கு உள்ளாக்கியவர். தனது இலட்சிய சமூகம் சுதந்திரம், சமத்துவம், சகோதரத்துவ அடிப்படையில் அமையும்- தேக்கமற்று முன்னேறும் எனக் கருதினார்.

பல நூற்றாண்டுக் கால வாழ்வெளியில் அரசியல் அதிகாரம் ஒரு சிலரின் கைகளிலேயே குவிந்து கிடந்து பெரும்பான்மை மக்கள் சமூக வாழ்விலிருந்து அப்புறப்படுத்தப்பட்ட நாட்டில் அரசாங்க அதிகாரம் அரசியல் அதிகாரம் பெறும் முறைகள் பற்றி அவர் ஆய்ந்து நடைமுறைப்படுத்த விழைந்தார். அப்படி பரவலாக அரசியல் அதிகாரம் நகர்ந்து நீடித்து பலன்களை உருவாக்கும் அரசியல் முறைப்பற்றியும் அவர் யோசித்தார். சர்வாதிகாரம் அது பாட்டாளிவகைப்பட்டதாக இருந்தாலும் முதலாளிவகைப்பட்டதாக இருந்தாலும் கொடுங்கோன்மைக்கே வழிவகுக்கும்- எனவே நாடாளுமன்ற ஜனநாயகமே தேவை என்றார். அரசு சோசலிசம், நாடாளுமன்ற ஜனநாயகம், சர்வாதிகாரமின்மை என்ற அம்சங்களின் இணைப்பையே அவர் பரிந்துரைத்தார்.

அரசே எல்லாம் என்கிற முழுமுதல் கொள்கையை அவர் ஏற்கவில்லை. மாக்கியவெலி கோட்பாடுகளை அவர் விமர்சிக்காமல் இல்லை. அரசை புனித புதிராக்கி கடவுளின் கட்டளையாக்கும் கூத்தை அவர் கேலி செய்தார். சட்டங்களுக்காக மக்கள் இல்லை- மக்களுக்காகவே சட்டங்கள்- மக்களுக்காகவே அரசு என்றார். மக்களின் விருப்பார்வங்களுக்கு பணிந்து நடக்கும் அரசையே அவர் விழைந்தார். சட்ட மறுப்பு என்பதை அராஜகம் என வர்ணித்தார். நாகரீகமான சமுதாயம் சட்டரீதியாகவே அமையமுடியும் என்றார். பலதரப்பட்ட மக்களின் சமூக அமைதிக்கு நீதி செய்வதே சட்டம் என்றார். தனிநபர் உரிமையை தொடர்ந்து வலியுறுத்திய அம்பேத்கர் அரசு நிறுவனத்தின் மீதான நம்பிக்கையையும் அத்துடன் இணைப்பதற்கு முயன்றார்.

விடுதலை, குடிமக்கள் ஒவ்வொருவரின் வாழ்வு, அவர்தம் மகிழ்ச்சி, மத உரிமை, ஒடுக்கப்பட்ட மக்களின் அரசியல் சமூக பொருளாதார ஏற்றத்தாழ்வுகளில் சிறப்பு கவனம், பயமற்ற சூழல் ஆகியவற்றை உத்தரவாதம் செய்யவேண்டியது அரசின் அடிப்படை கடமைகள் என்றார் அம்பேத்கர். அரசு என்பது எஜமான மனப்பாங்குடன் நடந்துவிடக்கூடாது- சேவகத்தன்மை கொண்டதாக இருக்கவேண்டும் என்றார். அரசியல் விடுதலையுடன் நிற்பதல்ல மானுடவிடுதலை. சமூக, பொருளாதார ஆன்மீக அறிவாற்றல் என விடுதலையின் பாதை நீண்டது என்றார் அம்பேத்கர்.

ஜனநாயகம் என்பது ஓர் அரசாங்க வடிவம் அல்ல. அது சமூக அமைப்பின் வடிவம். ஜனநாயகம் வெற்றி பெற சாதகமான சமூக ஏற்பாடு தேவையாகிறது. ஒருவர் மற்றவர்க்கு மரியாதையையும் உரிய மதிப்பினையும் கொடுத்து இணைந்து வாழும் முறை ஜனநாயகம். மனிதர்கள் தங்களிடம் அமைந்துள்ள பொதுமை குணங்களையும், பொதுமை உணர்வுகளையும், தேவைகளையும் முன்னிட்டு சமூகமாக அமைகிறார்கள். மொழி, தகவல் இதர தொடர்புகளால் சமூகம் தொடர்ந்து நிலைபெறுகிறது- வாழ்கிறது.

இந்தியாவில் சாதிய ஏற்பாடுகளால் பொது ஏற்பாடு தடுக்கப்பட்டுவிட்டது. மக்களிடம் மலரவேண்டிய ஒத்துழைப்பை சாதி தடை செய்துவிடுகிறது. மிக உன்னதமான இலட்சியம் என்கிற ஒன்றை நிறைவேற்றிடக்கூட அவர்களை ஒன்றுபட முடியாமல் செய்துவிடுகிறது. மனித உரிமைகள் அடிப்படையானது. ஜனநாயக சமூகம் அவற்றை உத்தரவாதப்படுத்தவேண்டும். ஒவ்வொரு தனிமனிதனும் ஜனநாயகத்தில் ஆக முக்கியமானவர். அவர்களுக்கான வாழ்வை ஓய்வை ஜனநாயகம் உறுதிசெய்திடவேண்டும் என்கிற வரையறைகளை அவர் முன்வைத்தார்.

கட்டுப்பாடற்ற சுந்தந்திரம் என்பதை அவர் ஏற்கவில்லை. ஏன் எல்லாவற்றிலும் அரசாங்கம் தலையிடுகிறது என வரும் குரல்களை அவர் கூர்ந்து கவனித்தவராகவும் இருந்தார். அதேநேரத்தில் அரசாங்கம் தன் தலையிடாக் கொள்கை மூலம்தான் விடுதலையை உணரவைக்கமுடியும் என்பதை அவர் ஏற்கவில்லை. அந்த விடுதலை யாருக்கானது- எதற்கான

விடுதலை என்பதை அவர் அம்பலப்படுத்தினார். நிலப்பிரபுக்களின் முதலாளிகளின் சுரண்டலுக்கு அவர்கள் உயர்வாழ்விற்கான விடுதலை என அவர் சாடினார்.

சமத்துவம் எனப் பேசும்போது சம அளவு வருவாய்- சம அளவு சொத்து என புரிந்து கொள்ளக்கூடாது என அவர் எச்சரித்தார். சிலருக்கு மட்டும் சிறப்பு சலுகைகள் இல்லாமல் இருப்பது- அனைவருக்குமான வாய்ப்புகள் என அதை நாம் புரிந்துகொள்ளவேண்டும் என்றார். இந்தியாவில் சோசலிசத்திற்கான சவால்கள் பொருளாதார தளத்தைவிட சமூக தளத்தில்தான் என்பதை புரிந்துகொள்ளுங்கள் என அவர் உரத்து சொல்லிவந்தார். இந்தியாவில் பொது உடைமை நனவாக வேண்டும் என நினைக்கும் கம்யூனிஸ்ட்கள் சமூக சீர்திருத்தம் மிக அவசியமானது என்பதை புரிந்துகொள்ளவேண்டும் என்றார். இதில் தப்பிக்கவே முடியாது எனவும் அழுத்தமாக அம்பேத்கர் வாதிட்டுவந்தார்.

புத்தமா-மார்க்சியமா எவ்வழி என்கிற ஆய்வில் வன்முறை, சர்வாதிகாரம், பொதுவுடைமை சித்தாந்தத்தின் பலம்- பலவீனம் பற்றி அவர் விவாதித்தார். கம்யூனிச வாழ்க்கை முறையைவிட புத்த வாழ்க்கைமுறை சிறந்தது என பரிந்துரைக்கிறார். புத்தருக்கும் மார்க்சிற்கும் குறிக்கோள் பொதுவானதாக இருந்தாலும் மார்க்கம் வேறுபடுகிறது. எவ்வழி மேலானது? எது நீண்டகாலம் நிலைத்து பயன்தரப்போவது என்கிற வினாக்களை அவர் எழுப்பி விடைகாண முயன்றார்.

பொதுவுடைமைவாதிகள் வன்முறையை ஒரு முற்றான தத்துவமாக முன்வைக்கிறார்கள். உழைப்பாளர் சர்வாதிகாரம் எனப் பிரகடனப்படுத்துகிறார்கள். புத்தர் சர்வாதிகாரத்தை ஒருபோதும் ஏற்றதில்லை. குறிக்கோள் போலவே அதை அடையும் மார்க்கமும் மதிப்பிற்குரியதாக இருக்கவேண்டும். கம்யூனிஸ்ட்கள் தங்கள் மதிப்புமிக்க குறிக்கோளை அடைய வேறு மதிப்புமிக்க குறிக்கோள்களை அழிக்கவில்லை என சொல்லமுடியுமா என அம்பேத்கர் கேள்வி எழுப்பினார். மனிதகொலைகளுக்கு மதிப்பு கிடையாதா? உயிர்வதையில்லாமல் உடைமை மீட்பு முடியாதா? அரசு உதிர்ந்துபோகும் என்கிறார்களே அதற்கு

பதில் அவ்விடத்திற்கு ஏதேனும் வருமா? அராஜகம் அரங்கேறிவிடுமா என்கிற வினாக்கள் அவரிடம் இருந்தன.

ருஷ்யாவின் பொதுவுடைமை சர்வாதிகாரம் பல சாதனைகள் புரிந்திருப்பதை மறுக்க முடியாது.எனவேதான் பிற்பட்ட நாடுகளுக்கு அதை நான் பரிந்துரைக்கிறேன் என அவர் கூறினார். பலத்தினால் நடத்தப்படும் அரசு என்பதைவிட அறநெறி இயல்பின் வழியான அரசு உயர்ந்தது என்பதில் ஆழமான நம்பிக்கையை அம்பேத்கர் வெளிப்படுத்தினார். ருஷ்யப்புரட்சியை நாம் வரவேற்கிறோம். அதன் நோக்கம் சமத்துவத்தை உருவாக்குவது என்பதாக இருக்கிறது. சமத்துவத்தை உருவாக்கும்போது சகோதரத்துவத்தை, சுதந்திரத்தை தியாகம் செய்துவிடமுடியாது என்கிற எச்சரிக்கை உணர்வையும் அவர் சேர்த்தே சொல்லிவந்தார். புத்தரின் வழியால்தான் இம்மூன்றையும் தர இயலும். கம்யூனிசத்தால் ஒன்றைத்தான் கொடுக்க முடியும் என்கிற முடிவிற்கு அவர் வந்தடைந்தார்.

சோவியத் விமர்சகராக இருந்தபோதிலும் அமெரிக்க ஆதரவு என்கிற நிலைப்பாட்டை அவர் எடுக்கவில்லை. அமெரிக்கா ஜனநாயகம் பேசினாலும் நடைமுறையில் முதலாளித்துவமாகவே இருக்கிறது என்றார். அமெரிக்காவின் செல்வாக்கு விரிவுபடுவது பேராபத்தின் அறிகுறி என எச்சரித்து வந்தார். நேருவின் வெளிநாட்டு கொள்கையை வாய்ப்பு கிடைத்தபொழுதெல்லாம் தாக்கியவர்களில் அம்பேத்கரும் ஒருவர். கூட்டுசேரா கொள்கை இந்தியாவை நண்பரற்ற நாடாக மாற்றிவிடும் என நாடாளுமன்றத்திலேயே எச்சரித்தவர் அம்பேத்கர். ருஷ்யா, சீனாவிற்கு இந்தியாவில் கம்யூனிசம் பரவவேண்டும் என்கிற நோக்கம் உள்ளது என்பதையும் அவர் குற்றசாட்டாக பேசினார். நமது வெளிநாட்டுக்கொள்கை நமது பிரச்சனைகளை தீர்க்கிறதோ இல்லையோ மற்ற நாடுகளின் பிரச்சனைகளை தீர்த்துவிடுகிறது என கேலியாக குறிப்பிட்டவர் அம்பேத்கர்.

‘ஒரு மொழி, ஒரு மதம், ஒரு வாழ்க்கைமுறைதான்’ நாட்டில் அதன் தேசியத்திற்கான தூண்டலாக அமையும் என்ற கருத்து அம்பேத்கரிடம் இருந்தது. நாடு முழுவதற்கும் ஒரே ஆட்சிமொழியாக இந்தி இருந்திடலாம் என்றும் அவர் தெரிவித்தார். திராவிடப்பகுதியில்

எதிர்ப்பு வரலாமே என வினவியபோது தேசத்திற்கு அவசியம் என கருதுவதை நாம் செய்தாகவேண்டும் என்றார். நிர்வாக வசதிக்காகவே நாடு பிரிக்கப்பட்டுள்ளது. மொழிவாரி மாநிலங்கள் ஜனநாயகத்தை விரிவுபடுத்தும் என்றாலும், நாளடைவில் இந்தியா சிதறுண்டு போவதற்கு இது வழிவகுத்துவிடும் என வெளிப்படையாக பேசினார் அம்பேத்கர். மராட்டியன் என்கிற பெருமிதம் காரணமாக மீண்டும் பிறந்தால் அங்கேயே பிறக்கவேண்டும் என விழைந்தார். அதேநேரத்தில் இந்தியன், ஆசியக்காரன், உலக குடிமகன் என பெருமைப்படுதலையே தான் விரும்புவதாக தெரிவித்தார்.

பொருளாதாரக் கோட்பாடுகள் பற்றிய ஆக்கங்களை அம்பேத்கர் தந்துள்ளார். நாணயத்தின் பிரச்சனை, நிதிபற்றிய புத்தகங்கள் உலக அரங்கில் பாராட்டைப்பெற்றன. நிலவரி, வரிக்கொள்கை, தொழில்கொள்கை, விவசாயம், உணவு பாதுகாப்பு, தேசியமயம் போன்ற பல பிரச்சனைகளில் அவர் தலையிட்டு தன் கருத்துக்களை அவர் முன்வைத்துள்ளார். சோவியத் திட்டமிடுதல், ரிகார்டோ துவங்கி கீன்ஸ்வரை மேற்கின் பொருளாதார சிந்தனைகளை அவர் உள்வாங்கியிருந்தார்.

மூலதனம் என்பது சேமிப்பால், சேமிப்பு என்பது உபரியால்தான் என்பதை தெளிவாக ஏற்றுக்கொண்டார். துண்டு துக்காணி நிலங்களும், துண்டு துண்டாக நில விநியோகங்களும் நிலமற்ற தொழிலாளர்க்கு உதவாது என நினைத்தார். கம்யூனிஸ்ட் தலைவர் டாங்கேவுடன் நடத்திய உரையாடலில் எல்லோருக்கும் பிரித்துக்கொடுக்க எங்கே நிலம் இருக்கிறது. சோவியத் முறையை பின்பற்றுவதே நல்லது. கூட்டுப்பண்ணை முறை சிறந்தது என்றார். விவசாயம் நவீனப்படுத்தப்படவேண்டும். உரிய விஞ்ஞான திட்டங்கள் உடனடி அவசியம் என்றார். நில அடமான வங்கிகள், கூட்டுறவு மற்றும் மார்கெடிங் சொசைட்டிகள் ஆகியவை ஏற்படுத்தப்படும் என்பதை அவர்தன் கட்சி தேர்தல் அறிக்கையாக வெளியிட்டார்.

விவசாயமானாலும் தொழிற்சாலையானாலும் மூலதனத்தை அரசே வழங்கிடவேண்டும் என கோரினார். விவசாயத் தொழிலாளர்க்கு குறந்தபட்ச கூலி உத்தரவாதம் செய்யப்படவேண்டும் என்றார். பொருளாதார வாழ்வை

அரசாங்கமே திட்டமிடல் நன்று என்றார். அதே நேரத்தில் அரசாங்க சோசலிசம் என்கிற பெயரில் சர்வாதிகாரம் நிகழ்ந்துவிடக்கூடாது என்கிற எச்சரிக்கை உணர்வையும் அவரெழுப்பிக்கொண்டே இருந்தார். தனது கட்சியின் தேர்தல் அறிக்கையில் இன்ஷ்யூரன்ஸ், பேருந்துகள் தேசிய மயம் என முன்வைத்தார்

அரசியல் சாசன சட்டங்கள் நாட்டின் அரசியல் அமைப்பை மட்டுமல்ல, பொருளாதார அமைப்பையும் தீர்மானிக்கக்கூடியதாக இருக்கவேண்டும் என அவர் வலியுறுத்திவந்தார். விரைவான தொழிற்மயமாக்கலுக்கு அரசாங்க சோசலிசம் அவசியம் என அவர் நினைத்தார். தர்மகர்த்தாமுறை என்பதை அவர் கடுமையாக சாடினார். சாதியும் பொருளாதார முன்னேற்றமும் பொருந்திபோகாது- கைகோர்க்காது. சாதிய உணர்வு பொருளாதார வளர்ச்சிகளை தடை செய்துவிடும் ஆற்றல் கொண்டது என்றார்..

நாட்டு மக்களின் வாங்கும் சக்திதான் நாணயம் தொடர்பான கொள்கையின் சாரமாக இருக்கவேண்டும். மற்ற நாடுகளின் நாணயங்களுடன் ஒப்பீடு செய்து நாணய மதிப்பு வீழ்ச்சி என்கிற கணிப்பை தவறு என்றார். இருநாடுகளின் பரிவர்த்தனை மதிப்புகள் மாறாமல் இருக்கும்போது இருநாடுகளின் பொருட்கள் விலையில் வித்தியாசமிருப்பது ஏன் என்கிற முக்கிய கேள்வியை அவர் எழுப்பினார். இந்தியாவிலும் தங்கமே நாணயமாக்கப்படவேண்டும் என்றார்.

மாநில வருவாயை உயர்த்தும் வரிவிதிப்பு குறித்து அம்பேத்கர் பேசினார். விற்பனைவரி முழுமையாக மாநிலபட்டியலில் இருக்கவேண்டும் என்றார். நிலவரியில் கெடுபிடி கூடாது என்றார். பட்ஜெட்டில் இராணுவ செலவினங்கள் கூடுதலாகி வருவதை அவர் விமர்சனக் கண்கொண்டு பார்த்தார். மது ஒழிப்பு என்பதைவிட பட்டினி ஒழிப்பில் கவனம் குவிப்போம் என்ற அம்பேத்கர் தனது 1952 தேர்தல் அறிக்கையில் மதுத்தடை நீக்குதல், இராணுவச் செலவைக் குறைத்தல் ஆகியவற்றை எழுப்பினார்.

கிராமப்புறங்களை தொழில்மயமாக்குதல் என்பதை அம்பேத்கர் வலியுறுத்தினார். தனியார் சொத்துரிமையை முற்றிலுமாக ஒழித்தல் என்பதில் அவருக்கு உடன்பாடு இருக்கவில்லை. உயர் உற்பத்தி பெருக்கம் பொதுத்துறைகள் மூலமே சாத்தியம் என்பதையும் அவர்

சொல்லிவந்தார். முதலாளிகள் தங்கள் தொழிலின் பட்ஜெட்டை கண்டிப்பாக அறிவிக்கவேண்டும் என்பதற்கான சட்டம் ஒன்று தேவை என்றவர் அம்பேத்கர். வேலை நிறுத்தம் என்பது கிரிமினல் குற்றமல்லவே என்றார். அனைத்து தகராறுகளிலும் அரசாங்கம் முதலாளிகள் பக்கமே நிற்பது ஏன் என்கிற வினாவை அவர் எழுப்பினார். பொதுப்பணத்தில் இயங்கும் போலீஸ்துறையை வேலைநிறுத்தம் செய்திடும் தொழிலாளர் மீது ஏவிவிடும் அரசாங்க செயலை ஏற்கமுடியாது என்றார். அப்படி செய்யும் உரிமை அரசாங்கத்திற்கு இருக்கக்கூடாது எனவும் கருதினார்.

கூடுதலாக சற்று கூலி ஏற்றிக் கேட்டால் அஞ்சுவோர் யுத்தத்திற்கு கண்மூடித்தனமாக செலவு செய்வதில் என்ன நியாயம் இருக்கிறது என்கிற கேள்வியை தொடுத்தவர் அம்பேத்கர். தொழில் அமைதி என்பது சமூக நீதி சார்ந்தது. அதை வெறும் அதிகாரம் சார்ந்து நிலைப்பெற செய்யமுடியாது. சட்டம் சார்ந்து கூட செய்யமுடியும். தொழிலாளர் பிளவுப்பட்டுக் கிடப்பதை, உள்ளீடற்று இருப்பதை, புரிந்துகொள்ளும் ஆற்றலில் மிக மேலெழுந்துவாரியாக இருப்பதை கண்ணுற்று துயருற்றவர் அம்பேத்கர். விடுதலை அடைவது என்பதைவிட எவர் அதை கையகப்படுத்துவது என்பதே மிக முக்கியமானது என்றார்.

அம்பேத்கரின் அறிவுப்பயணத்தில் அவர் பார்த்திடாத மைல் கற்களே இல்லை எனலாம். தன் கருத்து குறித்து எழும் விமர்சனங்களுக்கு அவர் அஞ்சியதே இல்லை. ஒடுக்கப்பட்டவர் முன்னேற்றம் என்பதற்காக தன் சிந்தையில் தேடிப்பிடித்து பதிந்தவைகளை அவர் நெஞ்சுரத்துடன் முன்வைத்தார்.

# 6. அம்பேத்கரின் முகப்புரை

இந்திய இளம் தலைமுறையினர் ஆணும் பெண்ணுமாக கூடிநின்று அரசியல் அமைப்பு சட்டத்தின் முகப்புரையை உரக்க படிப்பதையே போராட்ட வடிவமாக மாற்றினர். திரு மோடி அரசாங்கத்தின் குடியுரிமை சட்டத்திருத்தத்திற்கு எழுந்த எதிர்ப்பு வடிவமாக இதை நாம் காணமுடிந்தது. இப்படிப்பட்ட முகப்புரை 1949-50ல் எவ்வாறு உருவானது என்பது குறித்து விரிவான விவாதங்கள் இளம் தலைமுறையை சென்றடையட்டும் என்றெண்ணி இக்கட்டுரை எழுதப்பட்டுள்ளது.

அப்போராட்டத்தில் முகப்புரை வாசிக்கப்பட்டதும், முகப்புரை குறித்து விரிவாக விவாதித்த ஆகாஷ் ரதோர் (Aakash Singh Rathore) அவர்களின் ஜனவரி 2020ல் வந்த Ambedkar's Preamble புத்தகமும் இக்கட்டுரை எழுத என்னை தூண்டிய நிகழ்வுகள் என சொல்லலாம். இனி 81 சொற்களை மட்டுமே கொண்ட நம் முகப்புரை வந்த வரலாறை- அதை எழுதியதற்கு பாத்தியதை யாருக்கு என்பதை பார்க்கலாம்.

இந்திய அரசியல் நிர்ணயசபை ஏற்றுக்கொண்ட அரசியல் அமைப்பு சட்டத்தின் preamble எனும் முகப்புரை இவ்வாறு செல்கிறது.

WE, THE PEOPLE OF INDIA, having solemnly resolved to constitute India into a SOVEREIGN DEMOCRATIC REPUBLIC and to secure to all its citizens

JUSTICE, social, economic and political;

LIBERTY of thought, expression, belief, faith and worship;

EQUALITY of status and of opportunity; and to promote among them all

FRATERNITY assuring the dignity of the individual and the unity of the Nation;

IN OUR CONSTITUENT ASSEMBLY this 26th day of November 1949, do HEREBY ADOPT, ENACT AND GIVE TO OURSELVES THIS CONSTITUTION.

இந்த முகவுரை டிசம்பர் 18 1976ல் திருத்தப்பட்டு கீழ்கண்டவாறு

அமைக்கப்பட்டது.

WE, THE PEOPLE OF INDIA, having solemnly resolved to constitute India into a SOVEREIGN SOCIALIST SECULAR DEMOCRATIC REPUBLIC and to secure to all its citizens

JUSTICE, social, economic and political;

LIBERTY of thought, expression, belief, faith and worship;

EQUALITY of status and of opportunity; and to promote among them all

FRATERNITY assuring the dignity of the individual and the unity and integrity of the Nation;

IN OUR CONSTITUENT ASSEMBLY this 26th day of November 1949, do HEREBY ADOPT, ENACT AND GIVE TO OURSELVES THIS CONSTITUTION.

இதன் அதிகாரபூர்வ தமிழ் வடிவம்

**“ முகப்புரை**

**இந்திய மக்களாகிய நாம், இந்திய நாட்டினை இறையாண்மையும் சமநலச்சமுதாயமும் சமயச்சார்பின்மையும் மக்களாட்சிமுறையும் அமைந்ததொரு குடியரசாக நிறுவவும்,**

**அதன் குடிமக்கள் அனைவரும்**

**சமுதாய, பொருளியல், அரசியல் நீதி,**

**எண்ணம், அதன் வெளியீடு, கோட்பாடு, சமயநம்பிக்கை, வழிபாடு இவற்றில் தன்னுரிமை,**

**சமுதாயப்படிநிலை, வாய்ப்புநலம் இவற்றில் சமன்மை ஆகியவற்றை எய்திடச் செய்யவும்,**

**அவர்கள் அனைவரிடையேயும் தனிமனிதனின் மாண்பு, நாட்டு மக்களின் ஒற்றுமை, ஒருமைப்பட்டு இவற்றை உறுதிப்படுத்தும் உடன்பிறப்புரிமையினை வளர்க்கவும் உள்ளார்ந்த உறுதியுடையராய்,**

**நம்முடைய அரசமைப்புப் பேரவையில், 1949 நவம்பர் இருபத்தாறாம் நாளாகிய இன்று, ஈங்கிதனால், இந்த அரசமைப்பினை ஏற்று, இயற்றி, நமக்கு நாமே வழங்கிக்கொள்கிறோம்“**

முதலில் தரப்பட்டதற்கும் 1976க்குப் பின்னரான திருத்தத்திற்கும் 4 கலைச் சொற்களில் வேறுபாடு இருக்கிறது. அதாவது Sovereign Democratic என்பதுடன் socialist, secular பதங்களும் unity of the Nation என்பதுடன் and Integrity வார்த்தைகளும் திருத்தமாக சேர்க்கப்பட்டு இன்றுவரை இதுவே முகவுரையாக இருந்துவருகிறது.

1949ல் இறுதிசெய்யப்பட்ட அந்த முகப்புரையை எவர் எழுதியிருக்கமுடியும் என்பது விவாதத்திற்குரிய ஒன்றாகவே இருந்துவருகிறது. அதை நேரு எழுதினார் என உரிமை கோருபவர்களும் உண்டு. அவரின் நோக்க தீர்மான வாசகங்கள் அவை என்பது ஒருவகை வாதமாக இருந்துவருகிறது. இல்லை பி என் ராவ் எனும் அரசியல் அமைப்பு சட்டங்களின் வல்லுனர் எழுதினார் என ஒரு சாரார். பலரின் கூட்டுழைப்பால் அமையப்பெற்ற வாசகங்கள் அவை எனச் சிலர். இல்லை முழுமையாக அம்பேத்கரின் வாசக அமைவு தான் முகவுரை என்பது ரதோர் முன்வைக்கும் வாதம்.

இந்த நான்கு வாதங்களையும் மனச்சாய்வின்றி ஆய்ந்து பார்த்தால் அது அம்பேத்கரின் முகப்புரை என்ற முடிவை எட்டமுடியும் என்பதே அம்பேத்கர் முகப்புரை என்ற புத்தகத்தின் சாரம். ஆகாஷ் சிங் ரதோர் இதற்கான நூலை 230 பக்கங்களில் தந்துள்ளார். அம்பேத்கரின் இவ்வாசகங்கள் சரியாக பிப்ரவரி 6, 1948ல் பிறந்ததாக நிறுவுகிறார் ரதோர்.

2

முகப்புரை 81 வார்த்தைகளை கொண்டிருந்தது. 1976 திருத்தத்தால் 85 வார்த்தைகளாக அது மாற்றப்பட்டது.

“We, The People of India...

In Our Constituent Assembly this twenty- sixth day of November 1949, do Hereby Adopt, Enact And Give To Ourselves This Constitution” என்பது அதன்

பிரகடனப்பகுதி -declaratory part.

இதன் நோக்கப்பகுதி எனும் objective part " Having solemnly resolved to constitute India into a Sovereign Democrartic Republic.." என்பதாகும்.

அரசியல் நிர்ணய சபையில் ஒவ்வொரு வார்த்தையும் விவாதத்திற்கு உள்ளாகும் என்பதை நாம் அறிந்தே இருப்போம். அதேபோல் நோக்கப்பகுதியும் உள்ளானது. ரிபப்ளிக் எனச்சொல்வதா ஸ்டேட் என அழைப்பதா என்பது கூட வந்தது. யூனியன் என்பதா பெடரேஷன் என்பதா விவாதமானது.

முகப்புரையின் குறிக்கோள் பகுதி descriptive part விளக்கப்பகுதி எனச் சொல்லப்படுகிறது.

To secure to all its Citizens Justice, social, economic and political ; Liberty of thought, expression, belief, faith and worship ; Equality of Status and of Opportutnity ; and to promote among them all Fraternity assuring the dignity of the individual and the Unity of the Nation

இவைத்தவிர அரசியல் அமைப்பு சட்ட முகவுரையில் சில நாடுகள் கடவுள் அல்லது உயர்ந்தோரை அழைத்து சொல்லும் இழுத்துச் சொல்லும் invocative part என்பதை வைத்திருக்கும். நமது விவாதத்திலும் In the name of God Almighty, By the Grace of Parameshwar, invoking name of Mahatama Gandhi என்பன வந்தன. ஆனால் அப்படி இழுத்து கடவுளை அழைத்தல் என்பது இந்திய அரசியல் அமைப்பு சட்ட முகவுரையில் இடம்பெறவில்லை. சீனாவில் மாவோ பெயர் இழுக்கப்பட்டுள்ளது. அய்ரோப்பா நாடுகள் யேசுவின் பெயரையும், இஸ்லாமிய நாடுகள் அல்லாவின் பெயரையும் அழைத்துள்ளதை நாம் காணமுடியும்.

ரதோரின் ஆய்வு descriptive part ல் கவனம் செலுத்துகிறது. அப்பகுதி கீழ்கண்ட வாசகங்களை கொண்டுள்ளது .

To secure to all its Citizens Justice, social, economic and political ; Liberty of thought, expression, belief, faith and worship ; Equality of Status and of Opportutnity ; and to promote among them all Fraternity assuring the dignity of the individual and the Unity of the Nation

அதாவது To secure to all its Citizens என்கிற ஆறு வார்த்தைகளுடன் அது பயணிக்கிறது.

பிரிட்டிஷ் காலத்தின் 1935 இந்திய அரசாங்க சட்டம் நீக்கப்பட்டு விடுதலை இந்தியாவின் அரசியல் அமைப்பு சட்டம் ஜனவரி 26, 1950ல் அமுலுக்கு வந்தது. அரசியல் சட்ட நிர்ணயசபை இறுதி செய்து ஏற்றுக்கொண்ட நவம்பர் 26, 1949 தினத்தை போற்றும் வகையில் நவம்பர் 26 constitutional Day அனுசரிக்கப்படுகிறது.

காங்கிரஸ் செயற்குழு எதிர்கால அரசியல் அமைப்பு சட்டம் குறித்து பரிந்துரைக்க ஜூலை 1946ல் நேரு தலைமையில் வல்லுனர் குழு ஒன்றை அமைத்தது. ஆசப் அலி, கே எம் முன்ஷி, என் கோபால்சாமி அய்யங்கார், கே டி ஷா, ஹுமாயுன் கபீர் போன்றோர் அதில் இடம்பெற்றனர். அக்குழு தந்த வாசகங்களின் முக்கியப்பகுதி இங்கு தரப்பட்டுள்ளது.

“Wherein

All power and authority of the Sovereign Independent India, its constituent parts and organs of government, are derived from the people; and

Wherein

Shall be guaranteed to all the people of India by law and secured to them by declared social objectives and purposes, economic organization and administrative machinery

a ) justice, social, economic and political

b ) equality of status, of opportunity, and before the law;

c ) freedom of thought, belief, vocation, association, and action, subject to law and public morality; and

wherein

adequate safeguards shall be provided for minorities, backward areas, and classes; and

whereby

shall be maintained the integrity of the territory of the Republic and its sovereign rights on land, sea, and air according to Justice and the law of civilized nations.

அரசியல் சட்ட நிர்ணய சபைக்கு டிசம்பர் 13, 1946ல் ‘Resolution Regarding Aims and Objectives’ என்கிற நோக்கத் தீர்மானத்தை நேரு தந்திட்டார்.

a ) This Constitution assembly declares its firm and solemn resolve to proclaim India as an Independent Sovereign Republic and to draw up for her future governance a Constitution

தொடர்ந்து இதில் d , e, f, g பகுதிகளின் வாசகங்கள் மேற்குறிப்பிட்ட காங்கிரஸ் செயற்குழு வல்லுனர் கமிட்டி வாசகங்களாக அமைந்துள்ளன. ஆனால் நேருவின் வாசகத்தில் இடம்பெற்ற முக்கிய மாற்றம் freedom of expression, faith and worship எனச் சொல்வதில் இருந்தது. இந்த இரண்டு தீர்மானங்களிலும் freedom என்பதே இடம்பெற்றது - liberty இடம் பெறவில்லை. அங்குதான் அம்பேத்கரின் முக்கியத்துவம் வருகிறது என ஆய்ந்தளிக்கிறார் ரதோர்.

நேரு முன்மொழிந்த நோக்கத்தீர்மானம் முழுமையாக நிர்ணய சபையால் ஜனவரி 22, 1947ல் ஏற்றுக்கொள்ளப்பட்டிருந்தது. முன்பாக டிசம்பர் 17, 1946ல் இதன் மீதான விவாதம் நடைபெற்றது. அம்பேத்கர் அவர்களையும் கருத்துக்கூற ராஜேந்திர பிரசாத் அழைத்தார். அம்பேத்கர் தனது உரையில் முக்கிய கேள்வி ஒன்றை முன்வைத்தார்.

“I do not understand how it could be possible for any future Government which believes in doing justice socially, economically and politically, unless its economy is a socialist economy” எதிர்வரும் அரசாங்கம் சோசலிச பொருளாதாரத்தை அமைத்துக்கொள்ளாவிடில் சமூக, பொருளாதார, அரசியல் நீதி சாத்தியமா என்கிற மிக முக்கியமான கேள்விதான் அவர் முன்வைத்தது.

3

அம்பேத்கரின் ‘States and Minorities: What are Their Rights and How to secure Them in the Constitution of Free India’ என்கிற நூல் 1947ல் வெளியானது. அம்பேத்கர் இதை 20000 வார்த்தைகள் கொண்ட ஆவணமாக வல்லபாய் படேல் தலைமையிலான கமிட்டிக்கு (நிர்ணயசபை அட்வைசரி

கமிட்டி) அனுப்பியிருந்தார். அதன் துணைக்கமிட்டிகள் கிருபளானி மற்றும் எச் சி முகர்ஜி தலைமையில் இருந்தன. அம்பேத்கரும் அதில் உறுப்பினராக இருந்தார். ஆனால் அம்பேத்கர் ஆவணத்தை கமிட்டி பெரிதாக பொருட்படுத்தவில்லை. எனவேதான் அதை அவர் AISCF சார்பில் நூலாக வெளிக்கொணர்ந்தார். அம்பேத்கர் அதில் United States of India எனக் குறிப்பிட்டிருந்தார்.

Constituent Assembly Debates குறித்த இணையதளத்தில் இப்புத்தகம் 1945ல் வெளியானதாகவும் நிர்ணயசபைக்கு ஆவணமாக 1947ல் கொடுக்கப்பட்டதாக தெரிவிக்கப்பட்டுள்ளது. அந்த ஆவணத்தில் அம்பேத்கர் எழுதிய முகவுரை கீழ்கண்டவாறு மையப்பெற்றுள்ளது

PROPOSED PREAMBLE

We the people of the territories of British India distributed into administrative units called Provinces and Centrally Administered Areas and of the territories of the Indian States with a view to form a more perfect union of these territories do– ordain that the Provinces and the Centrally Administered Areas (to be hereafter designated as States) and the Indian States shall be joined together into a Body Politic for Legislative, Executive and Administrative purposes under the style The United States of India and that the union so formed shall be indissoluble and that with a view :

(i) To secure the blessings both of self-government and good government throughout the United States of India to ourselves and to out posterity,

(ii) To maintain the right of every subject to life, liberty and pursuit of happiness and to free speech and free exercise of religion,

(iii) To remove social, political and economic inequality by providing better opportunities to the submerged classes,

(iv) To make it possible for every subject to enjoy freedom from want and freedom from fear, and

(v) To provide against internal disorder and external aggression, establish this Constitu-

tion for the United States of India.

இங்கு அம்பேத்கர் சோசலிசம் என்கிற வார்த்தையை பயன்படுத்தவில்லை. காரணம் குறித்து அம்பேத்கர் ஆய்வாளர்களிடம் வேறுபட்ட பதில்களே கிடைக்கின்றன. தனது விருப்பத்திற்கு மாறான பலவற்றையே நான் செய்யவேண்டிய நிலையில் இருந்தேன் என்கிற அம்பேத்கரின் ஒப்புதல் வாக்குமூலத்தை சுட்டிக்காட்டுபவரும் உளர். நாட்டின் பிரிவினை என்கிற எதார்த்தம் நிர்ணய சபையில் கொணர்ந்த மாற்றம் என்பதை ரதோர் காரணமாக காட்டுகிறார்.

பி என் ராவ் அவர்கள் தந்த முகவுரை நிர்ணயசபையில் மே 30, 1947ல் சேர்த்துக்கொள்ளப்பட்டது. ஜூன் 30 அன்று தற்காலிகமாக அதை ஏற்றனர். அதில் காணப்படும் வார்த்தைகள்

“We, the people of India, seeking to promote the common good, do hereby, through our chosen representatives, enact, adopt and give to ourselves this Constitution”

நாட்டின் பிரிவினையை ஒட்டி நேருவின் நோக்கத்தீர்மானத்தை எவ்வாறு சரி செய்துகொள்வது என்பதற்கு வல்லுனர் குழு ஒன்றை அமைத்தனர். கே எம் முன்ஷி, கோபால்சாமி அய்யங்கார் ஆகியவர்களுடம் அல்லாடி கிருஷ்ணசாமி அய்யர், அம்பேத்கர் இடம் பெற்றனர். ஆலோசகராக ராவ் அமர்த்தப்பட்டார். நேருவும் சில மாற்றங்கள் தேவை- அடிப்படை அம்சங்கள் அப்படியே இருக்கும் என்றார். ஜூலை 18, 1947ல் அரசியல் சட்ட வரைவு கமிட்டி அமைக்கப்படும் என நேரு அறிவித்தார். அதேபோல் ஆகஸ்ட் 27 1947ல் வரைவுக்குழு அமைக்க நிர்ணயசபை தீர்மானம் இயற்றியது. கே எம் முன்ஷி, கோபால்சாமி அய்யங்கார், அல்லாடி கிருஷ்ணசாமி அய்யர், அம்பேத்கர், டி பி கைத்தான் , மாதவ ராவ், முகமதுசதுல்லா, கிருஷ்ணமாச்சாரி இடம் பெற்றனர். முதல் அமர்விலேயே அம்பேத்கர் ஒருமனதாக வரைவுக்குழு சேர்மனாக ஏற்கப்பட்டார்.

4

பிப்ரவரி 6, 1948 வரைவுக்குழு கூட்டத்தில் ராவ் முகப்புரைக்குப்பதில் கீழ்கண்ட முகப்புரை பதிலீடாகிறது என மினிட்ஸ் பதிவானது. அது

என்ன முகப்புரை- வானத்திலிருந்து குதித்த ஒன்றா. அம்பேத்கர் தனது 'கோட்பாக்கட்டிலிருந்து' எழுதிவந்த பேப்பர்தான் அது என ரதோர் நிறுவுகிறார். அதில் காணப்படும் வார்த்தைகள்

We, the people of India, having solemnly resolved to constitute India into a sovereign independent state, and to secure to, or promote among, all its citizens : Justice, social, economic and political ; liberty of thought, expression, belief, faith, worship, vocation, association and action; Equality of status, and of opportunity; and, Fraternity assuring the dignity of every individual without distinction of caste or creed..do hereby adopt enact and give to ourselves this constitution.

அக்கூட்டம் 3 மணி நேரத்திற்கு மேல் நடந்தும் முகப்புரை குறித்து விவாதம் 10 நிமிடங்கள் கூட நடக்கவில்லை என்கிறார் ரதோர். இதை அம்பேத்கர் தான் எழுதியிருக்கமுடியும் என்பதை அந்த ஒரு வரி 'Fraternity assuring the dignity of every individual without distinction of caste' காட்டும் என்பதை எவரும் மறுக்க இயலாது. நேரு, ராவ் என அனைவரின் வார்த்தைகளையும் இடம்பெற செய்து அம்பேத்கர் எது இந்தியத்தன்மைக்கு சரியாக இருக்குமோ அவ்வார்த்தைகளையும் இடம் பெற வைத்தார். நேரு 'to secure' என நோக்கத்தீர்மானத்தில் பேசியபோது அம்பேத்கர் 'to remove inequalities' என state and Minorities ஆக்கத்தில் பேசியிருந்தார். அதுதான் affirmative actionக்கு வழிவகுக்கும் என அம்பேத்கர் கருதினார்.

பிப்ரவரி 9, 1948ல் அம்பேத்கரின் முகவுரை குறித்த விவாதம் வந்தது. அதனடிப்படையில் திருத்தப்பட்ட நகலில் காணப்பட்ட வார்த்தைகள்

Fraternity, without distinction of caste, class or creed so as to assure the dignity of every individual and the unity of the nation என மாற்றம் பெற்றன.

பிப்ரவரி 21, 1948ல் அரசியல் சட்ட நிர்ணயசபையின் தலைவருக்கு அம்பேத்கர் அரசியல் சட்ட நகலை அனுப்பினார். அதில் இறுதி செய்யப்பட்டிருந்த முகவுரையின் வாசகங்கள் கீழ்கண்டவாறு அமைந்திருந்தன. அதில் without distinction of caste, class or creed என்பது இடம்பெறவில்லை.

" WE, THE PEOPLE OF INDIA, having solemnly resolved to constitute India into a SOVEREIGN DEMOCRATIC REPUBLIC and to secure to all its citizens : JUSTICE, social, economic and political; LIBERTY of thought, expression, belief, faith and worship; EQUALITY of status and of opportunity; and to promote among them all FRATERNITY assuring the dignity of the individual and the unity of the Nation.."

மேற்கண்ட வார்த்தைகள்தான் இறுதிவடிவமாக 1949லும், 1950லும் ஏற்கப்பட்ட வடிவமானது. அரசியல் சட்ட நகல் அம்பேத்கரின் மூன்று வாசிப்புகளை நிர்ணய சபையில் கண்டு முகவுரையில் எந்த மாற்றமும் செய்யப்படாமல் ஏற்கப்பட்டது.

5

Justice, social, economic and political என்கிற பதங்கள் விவாதமானபோது அல்லாடி கிருஷ்ணசாமி தனது வியத்தகு அறிவாற்றலால் அதன் அவசியத்தை வலியுறுத்தி நிலைபெறச் செய்தார் என்கிற பதிவையும் ரதோர் செய்கிறார். 1976ல் 42வது சட்டத்திருத்தத்தின்போது கூட இந்த clauseல் மாற்றம் கோரப்பட்டும் செய்யப்படவில்லை. அதில் Religious என்கிற வார்த்தை சேர்க்கப்பட வேண்டும் என்பது ஏற்கப்படவில்லை.

அம்பேத்கர் தனது எழுத்துக்களில் 'Justice, social, economic and political' குறித்து ஏராள விளக்கங்களை தந்துள்ளார். சவுத்பாரோ கமிட்டி 1919, வட்டமேஜை மாநாடுகள் 1930, சாதியை ஒழிப்பது 1936, அரசும் சிறுபான்மையினரும் 1947, மொழிவாரி மாநில சிந்தனைகள் 1955, புத்தர் கார்ல் மார்க்ஸ் 1956 ஆகிய அவரது ஆக்கங்களில் அரசியல் நியாயம் குறித்து ஏராளம் பேசப்பட்டுள்ளதாக ரதோர் பட்டியலிடுகிறார்.

அதேபோல் இந்தியாவில் சாதிகள், சாதியை ஒழிப்பது, இந்துயிசத்தின் தத்துவம் போன்றவற்றில் சமூக, பொருளாதர நியாயங்களை அவர் பேசுவதாக ரதோர் குறிப்பிடுகிறார். ஜான் துவே, ஜேம்ஸ் சாட்வெல், எட்வின் செலிகன், ஜேம்ஸ் ஹார்வே ராபின்சன் போன்ற கொலம்பியா பல்கலை பேராசிரியர்கள் அவருக்கு வாய்த்தனர். அவர் 1920லேயே லண்டனில் MSc, DSc Economics மற்றும் law degree பெற்றவராக இருந்தார்.

காந்தியுடன் அவருக்கு கடுமையான கருத்துவேறுபாடு இருந்தது. காந்தி 'cunning politician' என்கிற மதிப்பீடு அவரிடம் இருந்தது. தீண்டாமை என்பதை 'அசமத்துவ நீக்கம்' எனும் பிரச்சினையாக பார்க்காமல் அதிலும் அரசியல் செய்தார் காந்தி என்கிற கருத்தும் அவரிடம் இருந்தது. கிராமம் என்பது குறித்த பார்வையிலும் அடிப்படை வேறுபாடு இருந்தது. காந்தியும் அம்பேத்கரிடம் நிலவும் எண்ணத்தை உணர்ந்தவராக இருந்ததை அவரின் 6 ஆகஸ்ட் 1944 தேதியிட்ட கடிதம் உணர்த்தும்.

"தீண்டாமை விஷயத்தில் நம் இருவருக்கும் மாறுபட்ட பார்வைகள் இருக்கின்றன. பரந்த அரசியல் விஷயத்திலும் வேறுபட்ட கோணங்கள் இருக்கின்றன. இந்த இரண்டு அம்சங்களிலும் நாம் சந்திக்கும் புள்ளிகள் இருந்தால் மகிழ்ச்சி அடைவேன். தங்களின் திறமையை நான் அறிவேன். இணைந்து வேலை செய்தால் மகிழ்ச்சியாக இருக்கும். அதே நேரத்தில் தங்களிடம் நெருங்கிவரமுடியாத தோல்வியை நான் ஏற்றுக்கொள்கிறேன். சந்திக்கும் பொதுப்புள்ளியை தாங்கள் காட்டினால் அதைக் காண விழைகிறேன். இந்த துரதிருஷ்டமான வேறுபாட்டை நான் புரிந்துகொண்டு என்னை சமரசப்படுத்திக்கொள்கிறேன்." என்பது காந்தி எழுதிய வாசகங்களின் சாரமாக இருந்தது.

திலகர் சுயராஜ்யம் எனது பிறப்புரிமை என முழங்கினார். எவருக்கான பிறப்புரிமை என்ற கேள்வி அம்பேத்கரிடம் எழுவது இயல்பே. அம்பேத்கரிடம் பிரஞ்சு புரட்சியின் முழக்கங்கள் Liberty, Equality, Fraternity தாக்கத்தை உருவாக்கியிருந்தன. Freedom என்பது பொருத்தமில்லை- Liberty என்பதை எடுத்தாண்டார் அம்பேத்கர். இதை அற்புதமாகப் பாராட்டி கிருபளானி அக்டோபர் 17, 1949ல் அரசியல் நிர்ணய சபையில் பேசினார். சமூகத்தில் வன்முறை இருந்தால் அனைத்து லிபர்ட்டியும் பாதிக்கப்பட்டுவிடும் என காந்திய கொள்கையை சுட்டிக்காட்டி அவர் லிபர்ட்டியின் அவசியத்தை உணர்த்தினார்.

'நிலவும் சமூகத் தன்மைகளை' மாற்றுவதற்கு அஞ்சாத அரசாங்கம் தேவை- அது பிரிட்டிஷ் சர்க்காராக இருக்க முடியாது என அம்பேத்கர் வட்டமேஜை மாநாட்டில் குறிப்பிட்டார்.

..we must have a Govt in which men in power will not be afraid to amend the social and economic code of life which the dictates of justice and expediency so urgently call for. This role the British Govt will never be able to play. It is only a Govt which is of the people, for the people and by the people that will make this possible.

எங்களிடம் அரசியல் அதிகாரம் தரப்படாமல், நாங்கள் எங்களை விடுவித்துக்கொள்ள வழிவகையில்லாமல் விடுதலை எங்களுக்கு சாத்தியமில்லை என்பதையும் அவர் தன் வாதமாக முன்வைத்தார். ‘ஸ்வராஜ்’ என்று சொல்லும்போது எங்கள் மீதான காலம் காலமான ஒடுக்குமுறைகள் தொடருமோ என்கிற எண்ணம் வருகிறது என்றும் அவர் குறிப்பிட்டார்.

காந்தி அம்பேத்கருக்கு இந்துயிசத்திலேயே தீர்வைக் காணுதல் என்பதை பரிந்துரைத்தார். அந்நிய ஆட்சியிடம் போய் தீர்வை எதிர்பார்ப்பது சட்டியிலிருந்து நெருப்பிலே விழுவதாகிவிடும். முழுமையாக இந்துமதம் விடுத்து மதம் மாறுதல் என்பது வழியாகாது. தேசிய இயக்கத்தில் இதயபூர்வமாக பங்கேற்று அடிமைப்படுத்தும் அரசை தூக்கி எறிவது உகந்த வழி என்பது காந்தி தெரிவித்த கருத்துக்கள். சுயராஜ்யத்தில் தலித்களின் இடமென்ன என்பது அம்பேத்கரின் தலையாய கேள்வியாக இருந்தது. சுயராஜ்யத்தில் தரமான வாழ்க்கை, படிக்க வாய்ப்பு, தீண்டாமை கொடுமைக்கு உள்ளாகாமல் இருத்தல் இருக்குமா என அவர் வினவினார். சாதியை ஒழிப்பது என்கிற ஆக்கத்தில் swaraj for Hindus may turn out to be only a step toward our slavery என அவர் தன் அய்யத்தை வெளிப்படுத்தியிருந்தார்.

அம்பேத்கர் 5 வகைப்பட்ட இந்துக்கள் என்கிற பட்டியலை சூத்திரர்கள் யார் என்பதில் தருகிறார்.

இந்து சமூக முறையில் குறையில்லை என அப்படியே ஏற்பவர்கள்- மாற்றம் புனிதம் கெட்டுவிடும் என நினைக்கும் இந்துக்கள்

ஆர்யசமாஜிகள் போன்று வேத அடிப்படையில் எல்லாம் என்பவர்கள்

இந்து முறையில் குறையிருக்கிறது என்பது உண்மைதான். சட்டம் அதை ஆதரிப்பதில்லை. எனவே மெதுவாக தவறான முறைகள் செத்து மடிந்துவிடும் என நினைக்கும் இந்துக்கள்

அரசியலை முன்நிறுத்தும் இந்துக்கள். சமூக சீர்திருத்தம் என்பதெல்லாம் அரசியல் விடுதலைக்கு பின்னர்தான் என நினைப்பவர்கள்

அய்ந்தாவது வகையினர் சமூக சீர்திருத்தம் தலையாயது என கருதுபவர்கள்- சுயராஜ்யத்தைவிட முக்கியமானது என நினைப்பவர்கள்

எனவே சுயராஜ்யம் என பேசுபவர்கள் 6 கோடி தீண்டாமை கொடுமைக்குள்ளானவர்க்கும் சேர்த்துதான் என்பதை புரிந்து கொண்டுள்ளனரா என்பது அவர் விடை தேடிய மிக முக்கிய கேள்வி.

6

சமன்மை எனும் Equality என்பதை நேரு தீர்மானம் பேசினால் அம்பேத்கர் அசமத்துவம் நீக்கல் removal of inequality என்பதை பேசினார். அவரின் ‘புரட்சி எதிர்புரட்சி’ ஆக்கத்திலும், மார்க்சியம் குறித்த பார்வையிலும் caste antagonism என்பதை அம்பேத்கர் முன்வைத்தார். The history of India is nothing but a history of moral conflict between Buddhism and Brahminism என அவர் விளக்கினார். புத்த இயக்கம் என்பதை பிரஞ்சு புரட்சி போன்ற ஒன்றாக அவர் சித்தரித்தார். பிராம்மணியம்தான் graded inequality க்கு காரணம் என எடுத்துரைத்தார். மார்க்சியம் பேசுகின்ற முதலாளி- தொழிலாளி என்கிற இருமை போன்றதல்ல இந்த graded inequality என்றார். மிகவும் சிக்கலானது என அவர் கருதினார். சமூகத்தின் அனைத்து படிநிலைகளிலும் அதற்கு ஆதரவும் எதிர்ப்பும் இருக்கிறது. அகமணமுறை எனும் சகோதரியையும் அது கொண்டிருக்கிறது.

புத்தமத வீழ்ச்சிக்கு உள்ள காரணங்களில் ஒன்றாக இஸ்லாமியர் படையெடுப்பும் காரணமாக இருந்தது என அம்பேத்கர் கருதியதாக ரதோர் சொல்கிறார். சில புத்தமதத்தினர் ரஜ்புட் மன்னர்கள் கொடுமையிலிருந்து தற்காத்துக்கொள்ள இஸ்லாமை தழுவியதாகவும் ரதோர் ஆய்வு செல்கிறது.

Fraternity என்கிற கலைச்சொல் முகப்புரையில் இடம் பெற்றதை கிருபளானி பாராட்டிப்பேசினார். கடவுளின் குழந்தைகள் நாம் அனைவரும் என்ற எண்ணம் ஜனநாயகத்திற்கு நெருக்கமாக துணைபுரியட்டும் என்றார் கிருபளானி. We are one of another என்கிற பைபிளின் வரியையும் அவர்

சுட்டிக்காட்டினார்.

‘சகோதரத்துவம்’ என்கிற சொல்லாக்கம் முன்பு சொல்லப்பட்ட எந்த ஆவணத்திலும் இடம்பெறவில்லை. அம்பேத்கரின் ஆக்கமாக அது இடம்பெற்றது. காங்கிரசின் வல்லுனர் குழு அறிக்கை, நேருவின் நோக்கத்தீர்மானம், பி என் ராவின் முகப்புரை, ஸ்ரீமன் நாராயண் அவர்களால் தயாரிக்கப்பட்ட காந்திய அரசியல் சட்டம், எம் என் ராயின் அரசியல் சட்டம், சோசலிஸ்ட்கள் தயாரித்த அரசியல் சட்டம் என எதிலும் அச்சொல்லாக்கம் இடம்பெறவில்லை. பிப்ரவரி 6, 1948ல் அம்பேத்கர் ‘கோட்பாக்கட்டிலிருந்து’ எடுக்கப்பட்டு வாசிக்கப்பட்ட பிரதியில்தான் அச்சொல் முதலில் இடம்பெறுகிறது என்பதை ரதோர் நிறுவுகிறார்.

அம்பேத்கர் பிப்ரவரி 6 1948ல் எழுதியது ” Fraternity, without distinction of caste, class or creed, so as to assure the dignity of every individual and the unity of the Nation”. விடுதலை இந்தியாவில் 1949-50ல் இவ்வாக்கியம் Fraternity, assuring the dignity of the individual and the unity of the Nation என மாற்றப்பட்டு ஏற்கப்பட்டது. 1976ல் இதில் ‘and integrity’ என்பது சேர்க்கப்பட்டு ‘Fraternity, assuring the dignity of the individual and the unity and integrity of the Nation’ என தற்போது இருக்கிறது. ‘The need for fraternal concord and goodwill in India’ என்பதை அம்பேத்கர் தன் சொந்த வாழ்க்கை அனுபவங்களிலிருந்து உணர்ந்து அறிந்து இருந்ததால் அதில் அவரால் அழுத்தம் தந்து நிற்க, நிலைநாட்ட முடிந்தது.

ஆரம்பகாலங்களில் Liberty, Equality, Fraternity ஆகியவற்றை அவர் பிரஞ்சு புரட்சியின் தாக்கங்களிலிருந்து சொல்லிவந்தாலும், 1954ல் வானொலி பேட்டி ஒன்றில் தனது மாஸ்டர் புத்தரிடமிருந்து அவற்றை எடுத்துக்கொண்டதாக கூறினார். ” My philosophy has roots in religion and not in political science. I have derived them from the teachings of my master, the Buddha”

Annihilation of Caste ஆக்கத்தில் அவர் சகோதரத்துவம் குறித்து விளக்கியிருந்தார். அற்புதமான சில வரையறுப்புகளை அவ்வாக்கத்தில் அவர் செய்திருந்தார்.

” Democracy is not merely a form of Govt. It is primarily a mode of associated living,

of conjoint communicated experience. It is essentially an attitude of respect and reverence towards fellow men"

மனிதன் சகமனிதன் மீது கொள்ளும் மதிப்பிடுகளின்படியே ஜனநாயகம் தழைக்கமுடியும். அது அரசியல் அரசாங்க ஏற்பாடு மட்டுமல்ல- வாழ்வியல் முறையாகவேண்டும் என அவர் விழைந்தார். நல்ல சமூகம் என்பது சாதி எனும் தேக்கத்தில் நிற்காமல் மொபைல் ஆக இருக்கவேண்டும். அதில் சேர்மானத் தடைகள் இருக்கக்கூடாது. அப்போதுதான் சகோதரத்துவம் அதன் மெய்மையை சந்திக்கும் என சொல்லித்தந்தார் அம்பேத்கர்.

அம்பேத்கர் சகோதரத்துவம் என்பதற்கு தந்த முக்கியத்துவத்தை கீழ்கண்ட வரிகள் புலப்படுத்துவதை உணரமுடியும்.

" without fraternity, liberty would destroy equality and equality would destroy liberty. If in Democracy liberty does not destroy equality and equality does not destroy liberty, it is because at the basis of both there is fraternity. Fraternity is therefore the root of Democracy"

சகோதரத்துவம் இருந்தால்தான் உரிமையும் சமன்மையும் கூட நிலைப்பெறும் என்பதை அவர் உணர்த்தினார். அரசமைப்பு சட்ட நெறி என்பது கூட சமூகம் வளர்த்துக்கொள்ளவேண்டிய நெறிதான் என்றார். ஜனநாயகம் தழைத்திட பொது ஊழியர்களிடம் அது வளரவேண்டும். அநியாயம் எதிர்த்து அதை நீக்கிட நிற்கும் குரலாக அவர்கள் இருக்கவேண்டும். இந்த பொது உணர்வை சாதி உணர்வு கொன்றுவிடாமல் காக்கவேண்டும் என்ற கவலையை அவர் வெளிப்படுத்திவந்தார்.

இந்தக் கவலையை அவர் தன் உரையில் நவம்பர் 25, 1949ல் வெளிப்படுத்தினார். " On 26th Jan 1950, we are going to enter into a life of contradictions. In politics we will have equality and in social and economic life we will have inequality"

7

Dignity என்கிற தனிமனித மாண்பு என்பதும் சிறப்பான கலைச்சொல்லாக்கம். காந்தியின் அரசியல் சட்டம் என்கிற ஆக்கத்தில்

dignified and peaceful existence என்கிற பதம் இருக்கிறது. நேருவின் நோக்க தீர்மானத்தில், ராவின் முகப்புரை, எம் என் ராய் அரசியல் சட்டம், சோசலிஸ்ட்களின் அரசியல் சட்டம் ஆகியவற்றில் 'டிக்னிட்டி' என்கிற வார்த்தையில்லை என்கிறார் ரதோர்.

We the people என்பதை ராவ் அய்ரிஷ் அரசியல் சட்டத்திலிருந்து எடுத்துக்கொண்டாலும் அதில் இருந்த 'invocation clause' Divine Lord, Jesus போன்ற இறை குறிக்கும் சொற்களை எடுத்துக்கொள்ளவில்லை. ஐ நா வின் மனித உரிமை பிரகடனம் All human beings are born free and equal in dignity and rights என்பதை பேசுகிறது.

நிர்ணய சபையில் சீதாராமையா வேண்டிய முதலில் unity of Nation பின்னர் dignity of the individual வைக்கலாம் என்பது ஏற்கப்படவில்லை. கே எம் முன்ஷி மற்றும் பி என் ராவ் அவர்கள் இதில் அம்பேத்கருடன் உடன்பட்டு நின்றனர். கே எம் முன்ஷி இதை அழகாக விளக்கியிருந்தார். தனிமனித கண்ணியம் காப்பதில் அரசாங்கத்தின் கடமையை முன்ஷி வலியுறுத்தியிருந்தார்.

" Dignity was a word of moral and spiritual import; it implied an obligation on the part of the Union to respect the personality of the citizen and to create conditions in which every citizen would be left free to find individual self fulfillment" மேலும் ஹெகலின் 'அரசின் முழுமைத்துவம்' என்பதை மட்டுப்படுத்துவதாகவும் இந்த 'தனிமனிதன் மாண்பு' என்கிற அம்சம் இருக்கும் என்ற விளக்கத்தையும் முன்ஷியிடம் பெறமுடிகிறது. Dignity of High Office என்பதுடன் மாண்பு நிறுத்தப்படாமல் Dignity of common man என்பதற்கான நீட்சியை- சிந்தனையை முகப்புரையில் அம்பேத்கர் வெளிப்படுத்தினார்.

பேராசிரியர் ழாக் மரிடைன் அவர்களின் மேற்கோளை அம்பேத்கர் காட்டுகிறார். 'நபர்' என்பதற்கான எளிய பொருத்தமான விளக்கமது. 'நபர்' என்று மனிதன் ஒருவரை நாம் குறிக்கிறோம் என்றால் அவர் முழுமையானவர்- பகுதியல்ல. அடிமையல்ல- சுதந்திரமானவர் என்கிற புரிதல் வேண்டும். The value of the person, his dignity and rights, belong to the order of things naturally sacred என அப்பேராசிரியர் பேசும் தனிமனித மாண்பை அம்பேத்கர் எடுத்து விளக்கினார்.

‘அரசும் சிறுபன்மையினரும்’ என்கிற ஆக்கத்தில் அரசியல் ஜனநாயகம் நான்கு அம்சங்களில் நிலைகொண்டுள்ளது என்பதை அம்பேத்கர் சுட்டிக்காட்டினார். தனிநபர் அவரளவில் இறுதியானவர், தனிநபருக்கு அரசியல் சட்ட உரிமைகள், அரசியல் அமைப்பு தரும் சட்ட உரிமைகளை எந்த சலுகையையும் பெறுவதற்காக தனிநபர் இழக்கவேண்டியதில்லை. அரசாங்கம் ஆள்வது என்கிற உரிமையை எந்த தனியாரிடமும் ஒப்படைக்க கூடாது. ‘Not bread but honour is what they want’ என சுருக்கமாக அம்பேத்கர் மாண்பு குறித்து இலக்கணம் தந்தார்.

8

அரசியல் சட்ட நிர்ணய சபையில் அம்பேத்கர் மூன்று உரைகளை டிசம்பர் 17, 1946 - நவம்பர் 4, 1948- நவம்பர் 25 1949 ஆகிய நாட்களில் தந்தார். முதல் உரை பல்வேறு பொருதும் குழுக்களாக உள்ள இந்தியர்கள் மத்தியில் சில சலுகைகள், சில சமரசங்கள் மூலம் ஒன்றுபடுத்துதல் தேவை என்பதை வலியுறுத்தியது.

Let us leave aside slogans, let us even make a concession to the prejudices of our opponents, bring them in, so that they may willingly join with us on marching upon the road...that is the only way by which we can carry with us all sections of the country..

இரண்டாவது உரை நவம்பர் 1948ல் அரசியல் அமைப்பு சட்டத்தில் ஏதேனும் தவறு ஏற்படும் எனில், அதன் பொருள் நம்மிடம் மோசமான சட்டம் இருக்கிறது என்பதல்ல. மனிதன் இழிவாக நடந்துகொள்கிறான் என்பதாகவே இருக்கும் என்ற கருத்தை பிரதிபலித்தது. Constitutional morality என்பதை அவர் வரையறுத்துப் பேசினார். அது வளர்த்தெடுக்கப்படவேண்டிய அவசியத்தை வற்புறுத்தினார்.

மூன்றாவது உரை நவம்பர் 25, 1949ல் சகோதரத்துவம் பற்றி குறிப்பிடுகிறார். சாதிகளாக பிளவுண்டு நிற்பவர்கள் எப்படி தேசமாகமுடியும் என வினவுகிறார். The castes are anti national என்றார். Fraternity means a sense of common brotherhood of all Indians- of Indians being one people” அதேபோல் தேசம் குறித்து அருமையான வரி ஒன்றை அவரின் எழுத்துக்களில் பார்க்கமுடியும்.

Nation on the contrary is a spiritual reality binding people into a deep comradeship.

அம்பேத்கர் அவ்வுரையில் மூன்று அம்சங்களை முன்வைக்கிறார். சட்டவழிகளை பின்பற்றுதல்- இரத்தபுரட்சிகளை- சத்தியாக்கிரக போராட்டமுறைகளை கைவிடுதல்

CAD Debates 11.165.323

B.R. Ambedkar

If we wish to maintain democracy not merely in form, but also in fact, what must we do? The first thing in my judgment we must do is to hold fast to constitutional methods of achieving our social and economic objectives. It means we must abandon the bloody methods of revolution. It means that we must abandon the method of civil disobedience, non-cooperation and satyagraha. When there was no way left for constitutional methods for achieving economic and social objectives, there was a great deal of justification for unconstitutional methods. But where constitutional methods are open, there can be no justification for these unconstitutional methods. These methods are nothing but the Grammar of Anarchy and the sooner they are abandoned, the better for us.

அம்பேத்கர் குறிப்பிட்ட இரண்டாவது அம்சம்

CAD Debates 11.165.324

B.R. Ambedkar

The second thing we must do is to observe the caution which John Stuart Mill has given to all who are interested in the maintenance of democracy, namely, not “to lay their liberties at the feet of even a great man, or to trust him with powers which enable him to subvert their institutions”. There is nothing wrong in being grateful to great men who have rendered life-long services to the country. But there are limits to gratefulness. As has been well said by the Irish Patriot Daniel O’Connel, no man can be grateful at the cost of his honour, no woman can be grateful at the cost of her chastity and no nation can be grateful at the cost of its liberty. This caution is far more necessary in the case of India than in the case of any other country. For in India, Bhakti or what may be called the path of devotion or

